# அருள்

6/72

எல்லாம் சிவமயம்





ஸ்ரீ பரத்வாஜேஸ்வரர் கோயில்



உ


தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ] பரிதாவி ஆனி (14-6-72) [கருணை 9


வயலூர் வள்ளல் தோத்திரங்கள்

## பொய்யாக் கணபதி

வையத்தார் தொழுதேத்தும் வயலூரெம் பதியதனில்
அய்யா என அடைந்த அருணகிரிக் கருள்தந்து
கொய்மா மலர்தூவிக் கும்பிடுவார் குறைதீர்க்கும்
பொய்யாக் கணபதியைப் புலனொன்றிச் சிந்திப்பாம்.

## நர்த்தன விநாயகர்

வாடுகின்ற உயிர்க்கெல்லாம் வாழ்வளிக்கும்
வயலூரில் வந்து தோன்றி
நாடுகின்ற நற்பொருளே தந்துமிகும்
நம்வினைதீர் மருந்துமாகி
நீடுகின்ற புகழ்தந்து நினைப்பவர்க்கு
நற்றுணையாம் நம்பி யாகி
ஆடுகின்ற கணபதியை அகத்தடக்கி
அனுதினமும் சிந்திப் போமே

— இயற்றியவர் பசிப்பிணி மருத்துவர்
உறையூர் மு. ஆ. அருணாசலமுதலியார் அவர்கள்


| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-87.

# ஸ்ரீ பரத்வாஜேஸ்வரர் கோயில் திருப்பணி வரலாறு

தொண்டை நாடு, காஞ்சி மா நகரைத் தலை நகராகக் கொண்டு அரசாண்ட பல்லவ மன்னர்கள் காலத்தில், இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரித்து ஆளப் பெற்று வந்தது. அவற்றுள் இரண்டாவதாக உள்ளது புலியூர் கோட்டம். அப் புலியூர் கோட்டத்தின் தலைநகரான புலியூரில் திருப்பணி செய்யப்பட்டு வரும் ஸ்ரீ பரத்வாஜேஸ்வரர் கோயில் ஆர்காட்டுச் சாலைக்கு வடபகுதியில் வடபழனி ஆண்டவர் கோயிலுக்கு வடகிழக்கே நான்கு பர்லாங்கு தொலைவில் அமைந்துள்ளது. கோடம்பாக்கம் பவர்ஹவுஸ் பஸ் நிற்கும் இடத்திலிருந்து வடக்கே செல்லும் சிவன் கோயில் தெருக்கோடியில் இக்கோயில் உள்ளது.

இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியின் பெயர் ஸ்ரீ பரத்வாஜேஸ்வரர். அம்பிகையின் பெயர் ஸ்ரீ ஸ்வர்ணம்பிகை. இக்கோயில் சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டிருக்கும் என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள். மேலும் ஸ்ரீ பரத்வாஜ முனிவரும், வாலியும் இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியை வழிபட்டுப் பூசித்ததாகவும் தெரிய வருகிறது. அன்றியும் காஞ்சிபுரத்தில் அருளாளப் பெருமாள் கோயில் கல்வெட்டுகளிலிருந்து பல்லவர்களின் கோத்திரம், பரத்வாஜ கோத்திரம் என்றும் அதனால் பல்லவர்களால் எடுக்கப்பட்ட இம் மூர்த்தி பரத்வாஜர் என்று அழைக்கப்படுகிறது என்றும் சரித்திரம் கூறுகிறது.

இக்கோயிலின் சிறப்பான அம்சம், ஆவுடையார், சதுர வடிவமாக இருப்பதாகும். விமானம் தன்னகத்தே கலை நுணுக்கங்களைக் கொண்ட அழகிய சுதை வேலைப்பாடுகளைக் கொண்டு தந்நிகர் இல்லாத் தனித் பெருமையுடன் இலங்குகின்றது. ஸ்ரீ ஸ்வர்ணம்பிகை, நிற்கும் நிலையில் உள்ள விநாயகர், தக்ஷிணாமூர்த்தி, துர்க்கை, மகாவிஷ்ணு, பிரம்மா, சண்டிகேஸ்வரர், நவக்கிரகங்கள் இவைகள் எல்லா நம்மை மெய் மறக்கச் செய்யும் அழகு வடிவங்களாகும்.

"இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப் பெற்றால்

மனிதப் பிறவியும் வேண்டுவதே இம் மானிலத்தில்'' என்னும்படி யான தில்லையம்பலத்திலே எழுந்தருளி திருநடனம் புரியும் ஸ்ரீ நடராஜப் பெருமானின் விக்கிரகமும், சக்தியின் சொரூபமாய் இலங்கும் அன்னை சிவகாமியின் விக்கிரகமும், சைவசமயக் குரவர்கள் நால்வர் உருவங்களும், இல்லாதது பெருங் குறையாகும். அன்றியும் பல துர்மதங்களைக் கண்டித்தும், அறுசமயத்தை நிறுவியவருமான ஸ்ரீ சங்கரருக்கும், அகில உலக நாயகியான ஸ்ரீ காமாட்சி அம்மனுக்கும் திருவுருவம் இக் கோயிலில் இல்லாதது பெருங்குறையாகும். ஆகவே மேற்குறித்த சமய குரவர்கள், ஸ்ரீ நடராஜர், அம்பிகையின் திருவுருவங்கள் நிர்மாணிக்கப்பட வேண்டியது நம் கடமையாகும். வள்ளி, தெய்வானை சமேதராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி இப்பொழுது மகா மண்டபத்தில் ஒரு சிறு மேடையில் எழுந்தருளியிருக்கிறார். அவருக்கு ஒரு தனிக் கோயில் மேற்குப் பிரகாரத்தில் கட்டப்பட வேண்டும்.

காலப் போக்கினாலும், இயற்கையின் விளைவுகளினாலும் இக் கோயில் தற்பொழுது சிதலமடைந்துள்ளது. உடனடியாகப் பழுது பார்த்து, விரைவில் கும்பாபிஷேகமும் செய்ய வேண்டியதாய் உள்ளது.

மேற்படி, கோயிலின் திருப்பணி கும்பாபிஷேகம் ஆகியவைகள் உள்பட செலவு சுமார் ரூபாய் எண்பதாயிரம் முதல் ஒரு லட்சம் வரை ஆகும் என்று மதிப்பிடப் படுகிறது. இவற்றையெல்லாம் மனதில் கொண்டு, இந்து சமய அறநிலைய பாதுகாப்புத்துறை ஆணையரின் ஒப்புதல் பெற்று, ஒரு திருப்பணிக்குழு அமைக்கப்பட்டிருக்கிறது. இக்குழு சமீபத்தில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளையும், தருமையாதீனம் ஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய ஸ்வாமிகளையும் அணுகி ஆசிபெற்றுச் செயலாற்றி வருகிறது.

ஆஸ்தீக அன்பர்களின் மூலம் நன்கொடைகள் வசூலித்தும் வருகிறோம்.

மெய்யன்பர்கள் மனமுவந்து நன்கொடைகள் அளிக்குமாறு வேண்டுகிறேன்.

எஸ். வடிவேலு பிள்ளை,

தலைவர்
இந்து தர்ம மன்றம்

தலைவர்
ஸ்ரீ பரத்வாஜேஸ்வரர் கோயில்
திருப்பணிக்குழு



# நான் யார்?

## ஸ்ரீ ஆதிசங்கரர்

நான் ஈசுவரர்களுக்கு ஈசுவரன். என்னிடத்தில் பொருமையும் பகைமையும் ஒரு சிறிதும் இல்லை. இலக்ஷியத்தை அடைய முயல்பவர்களின் மனோரதத்தைப் பூர்த்தி செய்விப்பவன் எவனோ அவன் நானே.

நான் அழியாதவன், என்னை அழிக்க முடியாது. நான் ஈசுவரன், உயிருக்கு உயிராகியவன். நான் ஒப்பிலா ஆனந்தம் நிறைந்தவன், நான் பரமசிவன், நான் அளவிலடங்காதவன்.

ஆத்மாவை அறிந்தவர்களில் நான் சிறந்தவன், ஆத்மானந்தத்தையனுபவிப்பவன். பாலர்களும் படிப்பில்லாதவர்களுங்கூட எந்த ஆத்மாவின் பெருமையை 'நான்' என்ற உணர்வில் கண்டனுபவிக்கிறார்களோ அந்த ஆத்மா நான்.

ஆனந்தமும் அறிவும் ஆத்மானுபவமும் நிறைந்தவன் நான். காணப்படும் பிரகிருதியைப் பற்றிய எண்ணத்திலிருந்து நான் வெகுதூரம் விலகியவன். எது அப்ராகிருதமோ அதனால் நான் என் உள்ளத்தில் மகிழ்கிறேன்.

நான் தான் உலகங்களின் ஆதி. உபநிஷத உத்யானத்தில் விளையாடுபவன் நான். பொங்கி வழியும் துக்கக் கடலை வற்றச் செய்யும் வடவாக்னி நான்.

மேலும் கீழும் நாற்புறங்களிலும் என்னுடைய அதிசயமான பெருமைகளால் நான் அனைத்தையும் வியாபித்து நிற்கிறேன். வாதத்தாலும் பிரதிவாதத்தாலும் ஆராய்ச்சியாலும் நிர்ணயிக்கப்படுவதாய்க் காணும் பரம புருஷன் நானே.

நான் ரிஷி; ரிஷிகணங்களெல்லாம் நானே. சிருஷ்டியும் நான், சிஷ்டிக்கப்படுவதும் நான். செல்வத்தின் நிறைவும், வளர்ச்சியும் நான், திருப்தியும் திருப்தி தீபத்தின் ஒளியும் நான்.

பிறப்பு, தேய்தல், மூப்பு, சாவு ஆகிய மாறுதல்களினின்று நான் விடுபட்டவன்; நான் உடலன்று, சப்தம் ருசி முதலிய இந்திரிய விஷயங்களில் எனக்குப் பற்றில்லை; ஏனெனில் எனக்கு இந்திரியங்கள் இல்லை.

துக்கமும் பற்றும் பொருமையும் பயமும் எனக்கில்லை; ஏனெனில் நான் மனதன்று. உபநிஷதம் கூறுகிறது: அவனுக்குப் பிராணனுமில்லை. மனதுமில்லை. அவன் பரிசுத்தமானவன், உயர்ந்ததற்கெல்லாம் உயர்ந்தவன், அழிவற்றவன்.

என்றுமுள்ளதாய் மாசற்றதாய், பற்றற்றதாய் ஒன்றேயாகிப் பிளவு படாததாய்,

இரண்டற்றதாய், ஆனந்தமும் ஸத்தியமும் அறிவும் உருக் கொண்டதாய், அளவு படாத தாய் உள்ள பரப்பிரம்மம் நானே.

ஆகாசத்தைப்போல் நான் உள் ளேயும் வெளியேயும் நிரம்பி நிற் கிறேன்; மாறுபடாமல் அனைத் திலும் ஒன்றேயாகிப் பரிசுத்த மாய் பற்றற்று மாசற்றுத் திரி பற்று நான் பரிசுத்தமாயிருக் கிறேன்.

குணங்களும் செயலுமின்றி நான் என்றுமுள்ளவனுய்ப் பரி சுத்தனுய், அழுக்கும் ஆசையும் அற்றவனுய், மாறுபாடற்றவனுய் வடிவற்றவனுய் எப்பொழுதும் முக்தனுய் இருக்கிறேன்.

எனக்கு இந்திரிய சுகங்களில் விருப்பமில்லை. ஆத்மானுபவமும் அறிவும் ஆனந்தமும் என்னிடம் நிரம்பியிருக்கின்றன. வெளியுல கத்தைப்பற்றிய எண்ணத்தி னின்று நான் வெகு தூரம் விலகி யுள்ளேன். வெளியே காணப்படா தது எதுவோ அதனல் என்னுள் ளம் மகிழ்கிறது.

மஹாபூதங்களினும் நான் பெரியவனுதலால் அவற்றில் பொதிந்துள்ள சக்தியின் நன்மை யெல்லாம் நானே. காமதேவன் உற்பத்தி செய்யும் உணர்ச்சி வேகம் என்னிடம் இல்லை.

நான் ஒன்ருயிருப்பவன், 'இது அது,' 'இப்படி அப்படி,' 'இதைப் போல்' என்ற வேறுபாடு என் னிடம் இல்லை. ஆசையற்றவர் களால் பூஜித்தற்குரியவன் எவனே அவன் நானே. புண்ணி யம் பாவம் என்ற உள்ளுணர்வு என்னிடம் இல்லை.

ஒற்றுமையை விளங்கவைப் பவன் நான். வேதாந்த மகாவாக் கியத்தின் உண்மையை உணர்ந்து பரிசுத்தமான மனது படைத்தவர் களிடம் விளங்கும் பரதத்துவம் நானே. இரவின் இருள் போன்ற அஞ்ஞனத்தைப் போக்கும் சூரியன் நானே.

தீமையைப் போக்கும் மருந்து நான். நான் குணமும் குறியுமற்ற வன். நான் கருணையின் எல்லை. (அறம் பொருள் இன்பம் வீடு என்ற) நாலுவித புருஷார்த்தங் களையும் அளித்து அனைவரையும் பலவாருய் விடுவிப்பவன் நானே.

மூலிகைகளின் ஸாரம் நானே உலகமாகிற சேலையின் ஊடும் பாவும் நானே. ஓங்காரமெனும் தாமரையினின்று எழும் ஆனந்த மாகிய நறுமணத்தால் மதங் கொண்ட தேனீ போன்றவன் நான்.

அறிவும் நானே. அறியப்படு வதும் நானே. அறிபவன் நானே, அறிவின் சாதனங்களும் நானே, அறிபவன் அறிவு அறியப்படுவ தென்ற மூன்றையும் கடந்து கேவலம் ஸத்ருபமாயுள்ள ஆத்மா வும் நானே.

பக்தியும் நானே, பூஜையும் நானே; மோக்ஷமும் நானே, மோக்ஷஸாதனமும் நானே; அனைத்துயிர்களையும் ஆள்பவன் நானே, சென்றது இருப்பது வருவது என்ற அனைத்திற்கும் மூலகாரணம் நானே.

# மஹாலிங்கம்



ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள்
காஞ்சி காமகோடி பீடம்

அடையாளத்திற்கு ஸம்ஸ்கிருத பாஷையில் லிங்கம் என்று என்று பெயர். ஆகாசத்தில் இடி கர்ஜனை உண்டானல், மேகம் குழுமியிருப்பதாக அனுமானிக்கிறோம். மேகமிருப்பதை அறிவிக்கும் கர்ஜனை லிங்கம். இரவு மலையில் மரங்கள் தாமாக தீப்பற்றி எரிவதுண்டு. பகலிலும் எரியுமாயினும், அப்போழுது நெருப்புத் தெரியாது. ஆனல் புகை தெரியும். அந்தப் புகையைக் கொண்டு நெருப்பிருப்பதாக அனுமானிப்போம். அந்தப் புகை நெருப்புக்கு லிங்கம். லிங்கம் என்ற சொல் அடையாளம் என்ற அர்த்தத்தை உடையது என்பது இந்த உதாரணங்களிலிருந்து தெரியும். இப்படியே பிரபஞ்சத்திலுள்ள பொருள்களையெல்லாம் சிருஷ்டித்தவன் ஒருவன் இருக்கிறன் என்பதைக் காட்டும் லிங்கம் இருக்கிறது. இந்த உலகமே அந்த லிங்கம். கண்ணுக்குத் தெரியாததை நினைப்பூட்டக் கண்ணுக்குத் தெரியும் லிங்கம் ஏற்பட்டிருக்கிறது. யோசிப்போமானுல் எல்லாம் லிங்கமே. ஆயினும் ஒன்றைக் கண்டால் அவன் நினைவு நிச்சயமாக வருவதால் அதை மட்டும் லிங்கம், லிங்கமென்று சாஸ்திரம் ஏற்படுத்தியிருக்கிறது. அந்த நினைவு தினந்தோறும் உண்டாகும்படி செய்ய மாலையில் சிவதரிசனம் அவசியமென்று சொல்லப் பட்டிருக்கிறது.

ஈஸ்வர ஸ்வரூபம் இப்படிப் பட்டதென்று காட்ட அதைக் கூடுமான வரையில் அறிவிக்கக் கூடிய லிங்கத்தைச் சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. சாதாரண லிங்கத்தைவிட அதிகமாக ஸ்படிக லிங்கம் சிவஸ்வரூபத்தை அறிவிக்கக்கூடியது. லிங்கத்தில், பிரம்ம பீடம், விஷ்ணு பீடம், சிவ பீடம் என மூன்று பீடங்கள் உண்டு.

ஸ்ரீ காளஹஸ்தியில் லிங்கமானது எட்டுக்கால் பூச்சியாகவும், பாம்பாகவும், யானையாகவும் மூன்று பிரிவுகளாகவுமுள்ளது. ஸ்ரீ என்பதற்கு ஐசுவரியம், லக்ஷ்மி என்ற அர்த்தம். தவிர எட்டுக்கால் பூச்சி என்றும் அர்த்தமுண்டு. காளம் என்பதற்கு பாம்பு என்று அர்த்தம், ஹஸ்தி என்பதற்கு யானை என்று அர்த்தமுண்டு. இம் மூன்றும் வழிபட்டு லிங்கத்துடன் ஐக்கியமானது, ஸ்ரீ காளஹஸ்தி க்ஷேத்திரத்திலாகும். அங்கே, லிங்கம் அப்படியே மூன்றின் உருவங்களாகவுமிருக்கிறது. காளஹஸ்தியிலிருந்து 20 மைல் தூரத்தில் குடிமல்லம் என்று ஒரு க்ஷேத்திரமிருக்கிறது. அங்கு லிங்கம் பரசுராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அடிப்பாகம் கந்தர்வ ரூபமாகவும் மத்தியபாகம் முண்டாசுடன் கூடிய பரசுராம ரூபமாகவும், உச்சிப்பாகம் சிவலிங்க ரூபமாகவு மிருக்கிறது. பிரம்மா ஒரு சாபத்தால் சித்திரஸேனன் என்ற கந்தர்வனானாராம். ஆகையால் அந்த லிங்கத்தின் அடி பிரம்மா. பரசுராமர் விஷ்ணு அவதாரம் - நடுவில் இருக்கிறார். முடியில் சாக்ஷாத் சிவனே.

இப்படிப்பட்ட லிங்கத்தைப் பூஜை செய்ய நர்மதை ஆற்றிலிருந்து லிங்கத்தைக் கொண்டு வர வேண்டும். பஞ்சாயதன பூஜையில் கணநாதன், சூரியன், அம்பாள், விஷ்ணு, பரமசிவன் ஆகிய ஐந்து மூர்த்தங்கள் இருக்க வேண்டும். ஏகலிங்க பூஜை செய்தால், நிவேதனம் பிறகு சண்டேசுவரருக்கு அர்ப்பணமாகிவிடுகிறது. ஆகையால் தான் சிவன் கோயில் பிரஸாதம் சாப்பிடக் கூடாது. வீடுகளில் சிவலிங்கத்தை மாத்திரம் தனியாக பூஜிக்கக் கூடாது. ஆதித்யன், அம்பிகை, விஷ்ணு, கணநாதன், மகேசுவரன் என்ற ஐந்து மூர்த்தங்களையும் வைத்துப் பூஜை செய்ய வேண்டும். தஞ்சாவூருக்கடுத்த வல்லத்தில் ஸூரியன் ஸ்படிமாகக் கிடைக்கிறது. கணநாதம் என்ற சிவப்புக் கல் கங்கையில் விழும் சோண பத்திரையில் கிடைக்கிறது. காளஹஸ்திக் கருகிலுள்ள ஸுவர்ணமுகி நதியில் அம்பிகை அகப்படுகிறது. இப்படியே விஷ்ணு பஞ்சாயதன பூஜையுமுண்டு.

ஈசுவரனை வேதம் வர்ணிக்கையில் "அவருக்குக் கையில்லை, காதில்லை கண்ணில்லை. ஆனால் எல்லாவற்றையும்பார்ப்பவர்" என்று சொல்லியிருக்கிறது. கண்ணில்லை, காதில்லை என்றால் உருவமேயில்லை. உருவமில்லையானால் அவர் எப்படித்தான் இருக்கிறார்? நர்மதா பாணம் உருவ மற்றது. அது அவர் எப்படி இருக்கிறார் என்று தெரிவிக்கிறது. அது வட்டமாக இருக்கிறது. வட்டத்திற்கு ஆதியுமில்லை அந்தமுமில்லை. ஈசுவரன் ஆதியுமந்தமுமற்றவர் என்று பாண லிங்கம் காட்டுகிறது. ஸ்படிகலிங்கம் அவரை இன்னும் நன்றாகத் தெரிவிக்கிறது.

சிவன் கோயில்களில் கர்ப்பகிருஹத்தில் உள்ள லிங்கத்தை மஹா

லிங்கம் என்கிறோம். எந்தக் கோயிலும் மஹாலிங்கத்திற்குக் கபாலீசுவரர் என்றோ, வன்மீக நாதர் என்றோ, ராமநாதர் என்றோ இப்படிப் பல பெயர்கள் உண்டு. ஆனால் ஒரு மஹாலிங்கத் துக்கு மாத்திரம் மஹாலிங்கம் என்றே பெயர். அந்த மஹாலிங் கம் மத்தியார் ஜுனத்தில் இருக் கிறது, மத்தியார்ஜுனம் என்பது திருவிடைமருதூர். அங்குள்ள லிங்கத்தை மஹாலிங்கம் என்று விசேஷமாகச் சொல்லுகிறோம். காரணம் சோழ தேசமே ஒரு கோயிலாக இருக்கிறது. 'வித்யா கௌடே, சிவச்சோளே' என்று சொல்லுவதுண்டு. தர்க்கம் முத லிய வித்தைகளுக்குக் கௌட தேசம், அதாவது வங்காளம் பிர ஸித்தம் சைவத்திற்கு சோழ தேசம் பிரஸித்தம் என்பது அதன் அர்த்தம். சோழ தேசத்தில் சிவன்கோயில்கள் அதிகமாக இருப்பதல்லாமல் அந்தத் தேசமே ஒரு சிவன் கோயி லாக இருக்கிறது. எந்தச் சிவன் கோயிலிலும், கன்னி மூலையில் விக்னேசுவரரும் மேற்கில் சுப்ர மணியரும் வடக்கில் சண்டேஸ் வரரும் தெற்கில் தக்ஷிணாமூர்த்தி யும், அக்கினி மூலையில் சோமாஸ் கந்தரும், ஈசானத்தில் நடராஜா வும் பைரவருமிருப்பார்கள். பரி வார தேவதைகள் இன்ன இன்ன விடத்தில் இருக்க வேண்டுமென்று ஆகமம் விதித்திருக்கிறது. மத்தி யார்ஜுனத்திற்கு நேர் மேற்கில் 10 மைல் தூரத்திலுள்ள ஸ்வாமிமலை, சுப்ரமண்ய க்ஷேத்தி ரம். அதற்குச் சிறிது தெற்கில் கன்னி மூலையிலுள்ள திருவலஞ் சுழி, பிரஸித்தமான கணேச க்ஷேத்திரம்.

திருவிடைமருதூருக்கு 10 மைல் தெற்கில் ஆலங்குடி என்று ஊர் இருக்கிறது. அது தக்ஷிணாமூர்த்தி க்ஷேத்திரம். இடைமருதூருக்கு நேர் வடக்கிலுள்ள திருச்சேய்ஞ லூர் என்பது சண்டேசுரர் கோயில். சண்டேசுவர நாயனார் திருச்சேய்ஞலூரில் அவதாரம் செய்ததாகப் பெரிய புராணமும் கூறியிருக்கிறது. திருவிடை மரு தூருக்கு நேர்கிழக்கிலுள்ளது திரு வாவடுதுறை. இப்பொழுதுள்ள மடம் ஏற்பட்டதற்கு முன்னேயே அது பிரஸித்தமான க்ஷேத்திரம். அது திருவிடைமருதூருக்கு நந்தி கேசுவரர் ஸந்நிதி. திருவாரூரில் ஸோமாஸ் கந்தர். தில்லையில் நட ராஜர், சீர்காழியில் பைரவர், இப்படிச் சோழ தேசமே ஒரு சிவாலயமாக இருக்கிறது. இந்தப் பெரிய ஆலயத்தின் கர்ப்பக்கிரு ஹம் திருவிடைமருதூர். அதி லுள்ள மஹாலிங்கத்திற்கு வேறு பெயர் இல்லை. மேலே சொன்ன பரிவார தேவதைகளையுடைய அந்தந்தக் கோயிலில் அந்தந்தப் பரிவார தேவதைக்கே பெருமை ஏற்பட்டிருக்கிறது. ஆரூரில் வன் மீக நாதர் முதலிய மூர்த்தங்கள் இருப்பினும், தியாகராஜ க்ஷேத் திர மென்றே அது பிரஸித்தி அடைந்திருக்கிறது. ஸ்வாமி மலைக்கு ஸுப்ரமண்ய க்ஷேத்திர மென்றே பிரஸித்தி. சிதம்பரத் திற்கு நடராஜ க்ஷேத்திர மென்றே பிரஸித்தி.

# வழிபாடு



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

கடவுள் தயவு நமக்கிருந்தால் சகுனமும் தடையும் என்ன செய்யும்? ஆகவே கட்வுளின் கருணையைப் பெற வழி தேடு.

மரண சமயத்தில் என்ன எண்ணம் தோன்றுகிறதோ அது போலத்தான் மறுபிறவி வாய்க்கும். அதற்காகத்தான் இப்போதிருந்தே பக்தி, ஜெபம், தியானம் எல்லாம் செய்துப் பழகவேண்டும்.

நகராட்சி அலுவலகத்தில் நெருப்பு அணைக்கும் மோட்டார் தயாராக இருக்கிறது. யார் வீட்டிலாவது நெருப்புப் பிடித்துவிட்டால், உடனே நகராட்சி அலுவலகத்திற்குத் தெரியப்படுத்தினால், உடனே மோட்டார் வந்து நெருப்பை அணைத்துவிடும். அதுபோல், கடவுள் நம்முடைய துன்பத்தை யெல்லாம் துடைக்கத் தயாராக இருக்கிறார். நீங்கள் அவரை அன்புடன் மனங்கசிந்து நினையுங்கள்; வருவார்.

பால் கறக்கும் மாடு நமதாக இருந்தாலும் கன்றுக்குட்டியைப் பிடித்துக் கொண்டு போனால் தான் பால் கறக்க முடியும். இல்லையேல் பால் கிடைக்காது. அதுபோல், அடியார்களின் துணை பற்றிப் போனால்தான் ஆண்டவனுடைய அருளைப் பெற முடியும்.

பெரிய அதிகாரிகள் தயவு இருந்தால் சிப்பந்திகள் நம்மை என்ன செய்ய முடியும். அதுபோல், கடவுளைப் பின் பற்றுபவர்களுக்கு எல்லா வினைகளும் அஞ்சும்.

புகை பிடிப்பதற்கும், ஒழுங்கீனமான பேச்சுக்கள் பேசவும் வெட்கப்பட வேண்டுமே தவிர, விபூதி பூசவும் தெய்வ வழிபாடு செய்யவுமா வெட்கப்படுவது?

கடவுள் தந்த உணவை அவருக்கு நிவேதனம் செய்யாமல் உண்டவன், பத்து வருடத்தில்

பன்னிரண்டு பிள்ளைகள் பிறக்கும் வீட்டில் பிறந்து அல்லல் படுவான்.

நாம் செய்யும், நினைக்கும் ரகசியமான குற்றத்தையும் நமக்குள்ளே இருக்கும் கடவுள் அறிந்து கொண்டே இருக்கிறுர்.

எல்லா சன்னல்களையும், கதவுகளையும் மூடிவிடலாம். ஆனுல் கடவுளின் கண்களாகிய சன்னல்களை மூட முடியாது.

நம் நாட்டுக் கங்கையும், அயல் நாட்டு தேம்ஸ் நதியும் தண்ணீராக இருந்தாலும், அதில் பேதமுண்டு. அதுபோல், வெளியே இருக்கும் கல்லுக்கும், ஆலயத்தில் விக்கிரகமாக இருக்கும் கல்லுக்கும் பேதமுண்டு.

கல்லிலே ஜோதி உண்டு! ஆகவேதான் கல்லினுல் கடவுள் உருவம் அமைத்தார்கள். கடவுள் ஜோதி வடிவம்.

செம்புக்கு இழுக்கும் காந்த சக்தி உண்டு. ரேடியோ செய்தியை இழுத்து நமக்கு அறிவிப்பது செம்பு. ஆகவேதான் செம்பினுலேயும் விக்கிரகம் அமைத்தார்கள்.

உடலை வளர்க்க எப்படி உணவு தேவையோ, அதுபோன்று உயிரை வளர்க்கப் பிரார்த்தனை தேவை.

மீசையை வளர்க்க முறுக்கி விடுவதில் எவ்வளவு கவலைப்படுகிறேம். அவ்வளவு கவலைகூட ஆண்டவனுடைய கருணையைப் பெறுவதில் கவலைப் படுவதில்லையே?

அமெரிக்காவில் பேசுவதும், இங்கிலாந்தில் பேசுவதும் ரேடியோ மூலமாக இங்கே கேட்குமானுல், நாம் இங்கே தோத்திரம் செய்வதும், பிரார்த்தனை பண்ணுவதும் கடவுளுக்கு ஏன்கேட்காது? அது விஞ்ஞானம், இது மெய்ஞ்ஞானம்!

இறுதிக் காலத்தில் வாதனை இல்லாமல் உயிர் பிரிய வேண்டுமென்று கடவுளிடத்தில் தினசரி பிரார்த்தனை செய். மரண சமயத்தில் படும் வேதனையை நினைத்தால் கடவுளை மறக்கமுடியுமா?

ஒரு அணு தொலைந்துவிட்டால் மனம் வருந்துவதுபோல், இன்று பிரார்த்தனை செய்யத் தவறிவிட்டோமே என்று வருந்தினுயா?

எந்தத் தபால் பெட்டியிலே கடிதம் போட்டாலும், குறித்த இடத்திற்குப் போய்ச் சேரும். அதுபோல், எந்த உருவத்தில் கடவுளை வழிபட்டாலும் அந்த வழிபாடு கடவுளுக்குப் போய்ச் சேரும்.

பொருளாசை உடையவனுக்குத் தகரம்கூட ரூபாயாகத் தோன்றும். பிசாசு பயமுடையோனுக்கு இரவில் கட்டை கூட பிசாசாகத் தோன்றும். அதுபோல், கடவுள் பக்தியில் சிறந்

தவனுக்கு எதைப் பார்த்தாலும் கடவுளாகத் தோன்றும்

தண்ணீர், வாட்டர், நீரு, பானி, வெள்ளம் எதை நீ குடித்தாலும் தாகம் தீரும். அதுபோல், முருகன், சிவன், கணபதி, விஷ்ணு, ராமன், அல்லா, பிதா எந்த உருவத்தை, எந்த நாமத்தைத் தியானித்தாலும் பிறவி தொலையும்.

அரசியல் தலைவர்கள் படத்தை வீட்டில் மாட்டி இருப்பது அவர்கள் நினைவுக்காக. அதுபோல், கடவுளை உருவமாகவும், படமாகவும் வீட்டில் வைத்து இருப்பது அவர் நினைவுக்காக.

கணவன் போட்டோவை மனைவி வணங்கினுல் கணவனுக்கு மகிழ்ச்சிதானே. அதுபோல், கடவுள் உருவத்தையும் வணங்கினுல் அவருக்கு மகிழ்ச்சிதான்.

கணவன் போட்டோவை மனைவி அவமதித்தால் கணவனுக்குக் கோபம் வருமல்லவா? அதுபோல் கடவுள் ஞாபகத்திற்காக வணங்கிவரும் உருவத்தையும் அவமதித்தாலும் கடவுளுக்குக் கோபம் வரும்.

மகன் மாண்ட அன்றுகூட பூஜை செய்யாமல் உணவு உட்கொள்ளேன் என்றுன் அருச்சுனன். நாம் நம் வீட்டில் ஒரு கோழி இறந்தால்கூட அன்று பூஜையை விட்டுவிடுகிறோம்.

எந்தத் தொழில் செய்தாலும் பஞ்சாட்சரத்தை ஜெபித்துக் கொண்டே செய்யுங்கள்! வினையகலும். ஆண்டவனை நினைத்து அழுவோனைக் கண்டு எமன் நடுங்குவான்.

முனிசிபல் வேலையாட்கள் எல்லா நாயையும் பிடித்துக் கொண்டு போய் சுடுவார்கள். ஆனுல் லைசன்ஸ் உள்ள நாயை மட்டும் பிடிப்பதில்லை. அதுபோல், எமன் எல்லோரையும் பிடிப்பான். பக்தனைக் கண்டால் அவனுக்குப் பயன்.

கலெக்டரிடம் சிநேகம் பண்ணுபவனுக்கு மக்கள் மதிப்புக் கொடுக்கிறுர்கள், அதுபோல், கடவுளிடம் பழகுவனுக்கும் மக்கள் மதிப்புக் கொடுப்பார்கள். விபூதியை விடாமல் தினசரி பூசுபவனுக்கே சாமியார் பட்டம் கொடுத்து விடுகிறுர்கள்.



# எல்லோரும் வாழ வேண்டும்

ஸ்ரீ வி. ஜி. பன்னீர்தாஸ்



உலகில் உள்ள ஒவ்வொரு மனிதனையும் உயர்த்தி வளமுடன் வாழச் செய்யும் ஒரு பொதுக் கோட்பாடு வேண்டும். சமுதாய ஏற்றத்தாழ்வு இல்லாமல் எல்லா மனிதரையும் உடன்பிறந்தோராகக் கருதி எல்லாருடைய நலனுக்காகவும் உழைக்கும் பண்பு நம்மிடையே வளர வேண்டும்.

உலகின் தட்ப வெப்ப நிலைக்கேற்ற மக்களின் உருவ அமைப்பும், நிறங்களும் வேறுபடலாம். ஆனால், எல்லா மனிதரின் அடிப்படை உணர்வுகளும், இயல்புகளும் ஆவல்களும் ஒன்றே.

மனிதனின் வாழ்க்கையை வளப்படுத்த எத்தனையோ வாழ்க்கை நெறிகள் கூறப்பட்டுள்ளன. பற்பல பெரியார்கள் அவ்வப்போது தோன்றி மனிதனின் மேம்பாட்டுக்காக உழைத்துள்ளனர்.

இயேசு, புத்தர், திருவள்ளுவர், காந்திபோன்ற மகான்கள் மனிதன் வாழ்வாங்கு வாழும் நெறியைப் புகட்டியுள்ளனர்.

வாழுகின்ற சூழ்நிலைக்கேற்ப சமயம் மாறுபடலாம். அற நம்பிக்கையும், உயர்குறிக்கோளும், எதிர்காலத்தைப்பற்றிய உணர்வுகளும் ஒன்றாகவே உள்ளன.

இந்த உயர்நெறியைத்தான்,

"யாதும் ஊரே, யாவரும் கேளிர்"
"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற நமதுமுன்னோரின்

உரைகள் உணர்த்துகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்த உண்மையை அவர்கள் நமக்கு உணர்த்தியுள்ளனர்.

உயர்ந்த வாழ்க்கை நெறி என்பது நம்மை வருத்திக்கொள்வதோ, அழித்துக்கொள்வதோ அல்ல, மற்றவர்களுக்கு உதவுவது தான் நிறைவான வாழ்க்கை. மற்றவர்களையும் வாழவைத்து நாமும் வாழ்வாங்கு வாழ்வது தான் உயர்ந்த வாழ்க்கை நெறி.

அடுத்தவர் அனைவரையும் உடன் பிறந்தோராகக் கருதி வாழும் சமுதாயத்தில் நாடுகளுக்குள்ளே போரும், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற வேறுபாடும் இருக்காது அல்லவா?

இந்த உயர் பண்பாட்டை நாம் நம்மிடையே வளர்த்துக் கொண்டு, நாம் ஒவ்வொருவரும் பிறர்க்கு உதவியாக வாழ முயல்வோம். எல்லாச் சமயங்களும் உணர்த்தும் வாழ்க்கை நெறி இதுவே.



# ரிஷிகேசம்

## ஸ்ரீ சுவாமி சிவானந்தா

கடவுள் ஒளிமயம். சாசுவதமான வாழ்க்கை. அன்பு சொரூபம். அவர் ஒருவரே சத்தியப் பொருள். அவர் ஒருவருக்கே இருக்கை உண்டு. ஏனைய பொருள்கள் யாவும் மித்தையே, இருக்கையற்றவையே, வெறும் தோற்றங்களே. எனவே உனது உற்ற துணைவனும் உன்னுள்ளில் உறைபவனுமான ஆண்டவனையே உள்ளன்புடனும் சிரத்தையுடனும் நேசி. அப்பொழுதுதான் அவன் அருள் கிட்டும்.

உனது பிறப்பு இறப்புக்குக் காரணம் உனது அஞ்ஞானமே. இதுவேதான் உனது ஆதி வியாதி. இதை நீக்க வல்லவர் கடவுள் ஒருவரே.

கடவுள் உருவமும், அருவமும் இவ்விரண்டையும் கடந்தவரும் ஆவர். அவரே பிரபஞ்ச சொரூபமாக விளங்கும் விராட் புருஷரும், சாகார சகுணமான ஈசுவரனும், நிராகார நிர்குண பரப்பிரம்மமும் ஆவர். அவர் ஒரு கர்மமும் செய்வதில்லை, எனினும் அவனன்றி ஓர் அணுவும் அசைவதுமில்லை.

சத்-சித்-ஆனந்த பரப்பிரம்மமே தனது மாயா சக்தியினுல் அசத்-ஜடம்-துக்கமாகிய ஜகத்தாகத் தோன்றுகிறுர். எனினும் அவர் மாயையினுல் பாதிக்கப்படாது தனித்தும் நிற்கின்றுர்.

கடவுள் பொறிகளுக்குப் புலன் படாதவர். வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவர். எனினும் பொறிவாயிலை அடைத்து விட்டு தியானத்தில் நிலைத்திருப்பாயாகில் உன்னில் கடவுள் சொரூபம் விளங்கும்.

எல்லா மதங்களுக்கும் மூலாதாரம் கடவுளே.

கடவுள் மேலாம் பரம புருஷர். அவரே நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவர். அவரே யாவற்றிலும் யாண்டும் அதிஷ்டானமாகவும் இருப்பவர். அவரே உலகில் அனைத்தையும வியாபித்தும் இருப்பவர். வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத அவரே வாக்கிலும் மனதிலும் ஊடுருவியும் நிற்பவர். அவரே யாவர்க்கும் இலக்ஷியப் பொருளாகவும் இருப்பவர்.

உனது வாழ்வின் இலக்ஷியம் ஆண்டவனை அடைவதே. அப்பொழுதுதான் நீ பூரணத்வம் அடைவாய். விடுதலையடைவாய். எனவே அவனை அடையப் பாடுபடு.

பரமாத்மா ஆதி-நடு-அந்தம் இல்லாதவர். ஆக்கல்-காத்தல்-அழித்தல் ஆகிய முத்தொழில்களை புரிபவர். மஹாபிரளயத்தில் நான்முகக் கடவுள் ஈறுக யாவும் ஒடுங்குகையில் அவர் ஒருவரே எஞ்சியிருப்பவர்.

பரமாத்மா அணுவுக்கும் அணுவானவர், மஹத்துக்கும் மஹத்தானவர், வற்றாத-எல்லையற்ற அளவிடற்கொண்ணாத கருணைக் கடல். அருள் களஞ்சியம். ஜீவன் உய்யும்பொருட்டு அவர் கருணை மழையைப் பொழிந்த வண்ணமாகவே இருக்கின்றார். தனது ஒவ்வொரு காரியத்தின் மூலம் ஜீவனைப் பண்படுத்தித் தன்பால் இழுத்த வண்ணமாகவும் இருக்கின்றார்.

நாம ரூபங்களுக்கெல்லாம் அடிப்படையாக உள்ளது சத்-சித்-ஆனந்த பரப்'ிரம்மமே. அதுவேதான் உலகப்பொருள்கள் அனைத்தையும் வியாபித்துமுள்ளது. அதுவேதான் அனைத்தையும் ஒன்றோடொன்று இணைக்கவும் செய்கின்றது.

ஜீவனுக்கு உயிரும் சக்தியும் அளிப்பவனும், பொறிகளுக்குப் பலன் தருபவனும், புத்திக்கு ஒளி கொடுப்பவனும், பிராணனுக்கு சக்தி அளிப்பவனும் பரமாத்மாவே. அவனேதான் உனது அந்தராத்மா. அவனேதான் சகல ஜீவராசிகள் உள்ளிலும் வசிப்பவன்.

எண்ணெய் இல்லாது தீபம் எரியாது. அது போன்று கடவுள் இல்லாது மனிதன் உயிர்வாழ முடியாது.

பரமாத்மா நமது கண்களுக்குப் புலப்படாது போனாலும் அவர் நம்மைப் பார்த்தவண்ணமாகவேதான் இருக்கின்றார். அவர் சம்பந்தித்த சப்தங்கள் நமது காதில் விழுவதில்லையே யொழிய அவர் நமது ஆரவாரங்கள் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டுதான் இருக்கின்றார். நமது மனதுக்கு அவர் எட்டாது போனாலும் நமது எண்ணங்களை அவர் அறிந்த வண்ணமாகவேதான் இருக்கின்றார். பரிசுத்தமே அவர் உரு. அவர் நீக்கமற எங்கும் நிறைந்துள்ள சைதன்யம். சத்-சித்- ஆனந்த பரப்பிரம்மம்.

பரம்பொருள் ஒன்றேதான் மாறாதது. என்றும் சாசுவதமாக உள்ளது. உலகப் பொருள்கள் அனைத்திற்கும் அடிப்படையாகவுள்ளது. அவரேதான் அந்தர்யாமியாக உன் உள்ளே உறைகின்றார். அவரேதான் உனக்கு நித்திய ஆனந்தத்தையும் அளிப்பவர்.

கடவுள் ஒருவருக்குத்தான் இருக்கையுண்டு. ஏனைய பொருள் களுக்கு இருக்கை கிடையாது. அவர் சம்பந்தமின்றி ஒரு பொரு ளும் நிலேத்து நிற்காது. அவரே தான் உலகத்தை சிருஷ்டி செய் கின்ருர். உலக முழுதையும் ஆளவும் செய்கின்ருர்.

இதயம், சுவாசப்பை, கல்லீரல், குடல்கள், கண்கள், காதுகள், மூக்கு முதலியன உன்னுள்ளே அடங்கியிருப்பன போன்று அண்ட சராசரங்கள் அனைத்தும் சுத்த சைதன்ய வஸ்துவான பர மாத்மாவுள்ளே அடங்கியுள்ளன. அவருக்குப் புறம்பே ஒரு பொரு ளும் இல்லாதூதால் அவருக்கு விஷயமாகக் கூடிய பொருளும் இல்லே.

கடவுள் பரிபூரணர். குறை ஏதும் இல்லாதவர். நன்மை தீமைகளோடு சம்பந்தப்படாத வர்.

கடவுளின் சங்கல்பம் அல்லது இச்சையே இயற்கை நியதிகளாக வடிவெடுக்கின்றது.

ஞானமே பரம்பொருளின் தன்மை. எனவே ஞானத்தைப் பெறு. விடுதலேயடை.

மானிட சரீரத்தில்தான் ஆத்ம ஞானம் சித்திக்கும். பரமனே அறிய முடியும். இக்காரணம் பற்றியேதான் தேவர்களும் மனி தனுகப் பிறக்க விரும்புகின்றனர்.



# அம்பத்தூர் ஸ்ரீ புவனேஸ்வரி பீடத்து ஸ்ரீ மௌனானந்த தீர்த்த மஹா ஸ்வாமிகள் அருள்வாக்கு



ராதா கல்யாண உத்ஸவத்தில் உஞ்சவ்ருத்தி எடுக்கிறார்கள். சில ப்ராம்மணோத்தமர்கள் தினமும் உஞ்சவ்ருத்தியால் ஜீவனம் நடத்துகிறார்கள். உஞ்சவ்ருத்தி என்றால் என்ன? களத்துமேட்டில் போர் அடித்து நெல்லை எடுத்துச் சென்ற பிறகு மிஞ்சிப்போய் கீழே சிதறியிருக்கும் நெல்லுக்கு உஞ்சம் என்று பெயர். அவர்களே விட்டு விட்டுபோன இந்த நெல் மிகப் பரிசுத்தமானது பாப ஸம்பந்தமில்லாதது. பகவன் நாமாவை சொல்லிக் கொண்டே இந்த நெல்லை பொறுக்கி எடுத்துக் கொண்டு வந்து உரலில் குத்தி அரிசியாக்கி அமுது படைத்து பகவானுக்கு நிவேதனம் செய்து பின் ஆஹாரம் செய்ய வேண்டும். இதுவே உஞ்சவ்ருத்தியாகும். களத்து மேட்டில் சிதறி இருக்கும் நெல்களால் ஜீவனம் செய்வது. இது பாப ஸம்பந்தமில்லாத பரிசுத்த ஜீவனம். இக்காலத்தில் இத்தகைய உஞ்சவ்ருத்தி ஸாத்யமில்லை. ஆகவே பாபத்தைப் போக்கும் பகவந்நாம பஜனை செய்துக் கொண்டு வீதிகளில் போகும்போது கிடைக்கும் பரிசுத்த அக்ஷதையை அன்னமாக்கி பகவானுக்கு நிவேதனம் செய்து பக்தருக்கு அளிக்கிறார்கள். பகவந்நாம ஸம்பந்தத்தால் இது மிகத் தூய்மை பெறுகிறது.

* * *

ஜிலேபி என்று சுலபமாக சொல்லிவிடலாம். ஆனால் தோலியை நீக்கிய உளுத்தம் பருப்பை ஊறவைத்து அறைத்து நெய்யில் பிழிந்து வேக வைத்து மறுபடியும் சர்க்கரை பாகில் ஊறினால் தான், ஜிலேபியைக் காணலாம். அதுபோல ப்ரம்ம ஞானி என்று சுலபமாகச்சொல்லி விடலாம். ஆனால் இந்திரியகோசங்களை விலக்கி மனத்தை த்யான நீரில் ஊறவைத்து யோகத் தீயில் இட்டு ஆனந்த ஸாகரத்தில் ஒரு தரமாவது மூழ்கினால் தான் அவரை ப்ரம்ம ஞானியென்று சொல்லலாம்.

* * *

ஸ்வாமி தர்சனத்தால் சிந்தனையுண்டாகிறது. சிந்தனையால் மனமடங்குகிறது. மனமடங்கி நிற்கும்போது பரமாத்மா சோபிக்கிறது. அவன் எங்கும் பரமாத்மாவின் செயலை காண்கிறான்.

# நடராஜர்

## மகாவித்துவான் ஆறுமுக நாவலர்

நடராஜர் நடனமாடிக் கொண்டிருப்பதேன்?

அணுக்களைப்பற்றி ஆராய்ச்சி செய்கின்ற விஞ்ஞானிகள் "அணுக்களெல்லாம் ஏகதாளத்தில் ஆடிக்கொண்டிருக்கின்றன" என்பதைக் கண்டு அதற்குரிய காரணம் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்க, காரணம் காணமுடியாது கலங்கினர். அதன் பின் நமது தெய்வம் நடனமாடிக்கொண்டிருக்கின்றது என்பதைக் கேட்டு வியந்த அந்த விஞ்ஞானிகள் இங்கு வந்து இதனைக் கண்டு சென்றுள்ளார்கள். அணுக்கள் இயங்க அண்டங்கள் இயங்குகின்றன. அண்டங்கள் இயங்க ஆண்டவனும் நடனமூர்த்தியாயிருக்கவேண்டும். ஆதலினுலேயே நடராஜர் விக்ரகம் நடனமாடும் ரூபமாக விளங்குகிறது. மனிதர்களுடைய நோக்கம் துக்கம் நீங்கிச் சுகம் அடையவேண்டும் என்பதே யாகும். நாம் ஆனந்தமடைய ஆனந்தமூர்த்தியை வணங்குதல் வேண்டும். அவர் ஆனந்த நடனம் புரிவதால் எப்பொழுதும் ஆனந்தத்தோடு விளங்குகிறுர் என்பது தெரிகிறது.

நடராஜர் திருவுருவத்தின் அமைப்புகள் யாவை?

இவ்விக்ரகம் ஒரு மனிதன் நடனமாடும், ரூபமாக அமைந்திருக்கிறது. வலக் காலைக் கீழே ஒரு அரக்கன் மேல் மிதித்து இடக் காலை மேலே உயர்த்தி, ஓர் இடக் கையால் தூக்கிய பாதத்தைக் காட்டி, மற்றைய இடக்கையில் அக்கினி தாங்கி, ஒரு வலக் கையில் அபயஹஸ்தம் பிடித்து, மற்ரெரு வலக் கையில் உடுக்கினைப் பிடித்து நிற்பதாக இத்திருவுருவம் அமைந்துளது.

இவரது வலக்கையில் உடுக்கு இருப்ப தேன்?

உடுக்கிலிருந்து வரும் ஒலியால் அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம், பெரிய தீயிலிருந்து பொறிகளும் ஊற்று நீரிலிருந்து குமிழிகளும் வருவனபோன்று இறைவனிடமிருந்து தோன்றுகின்றன என்பதைக் குறிக்கும். ஆகவே, இது சிருஷ்டி அல்லது ஆக்கத்தை உணர்த்துகின்றது. "உலகம் சப்தத்தில் பிறந்து அதிலேயே நிலை பெற்றிருப்பது" எனவேதம் கூறுகின்றது.

அபயஹஸ்தத்தின் கருத்தென்ன?

இது அமைதிக் குறியைக் காட்டுகிறது. "அங்ஙனமே யாகுக" என்பதைக் காட்டி உலக முழுவதும் மாருமலும் தவருமலும் ஒழுங்காய்ப் பரிபாலனம் செய்யப்படுவதை இது குறிக்கின்றது. "இறைவன் திருவடியே தஞ்சமென வந்தடைந்தார்களைக் காப்பாற்றுவேன்" எனக் கூறுவது போல் அமைந்திருக்கிறது. ஆகவே, இது ஸ்திதி அல்லது காத்தலைக் குறிக்கிறது.

இடக் கையில் தாங்கியிருக்கும் தீ எதை உணர்த்துகின்றது?

எல்லா உலகங்களையும் இறுதியில் அநித்தியமாக்கும் சம்ஹார சக்தியை அல்லது அழித்தலை உணர்த்துகின்றது.

ஊன்றிய வலக்கால் எதை உணர்த்துகின்றது?

படைத்தல் முதலிய விஷயங்களை எவர்க்கும் விளங்க வொட்டாமல் மறைக்கும் மாயா சக்தியை உணர்த்துகின்றது. உயிர்கள் செய்த பாவ புண்ணியங்களுக்குத் தக்கவாறு அவை இன்ப துன்பங்களை நுகரும்படி செய்தலாகிய "திரோபவம்" அல்லது "மறைத்தலை" இது உணர்த்துகின்றது.

தூக்கிய பாதம் எதை உணர்த்துகின்றது?

குஞ்சித பாதமாகிய தூக்கியிருக்கும் இடக் கால் எல்லோரையும் மயக்கும்படியானதும் அநாதியும், அநந்தமுமாயுமுள்ள சிருஷ்டியாதி நாடகத்திலிருந்து உயிர் விடுபட்டு ஓய்வடையும்படி செய்யும் நிழல் போன்ற கடவுளின் கருணையைக் குறிக்கின்றது. இப்பாதத்தை ஓர் இடக் கை சுட்டிக்காட்டி நமக்குபதேசிக்கும் குருவேபோல் "ஆண்டவன் திருவடியன்றி உயிர்களுக்கு கதியில்லை. ஆதலால் அதனை அடைய முயலுங்கள்" என உபதேசிப்பது போல் இருக்கின்றது. ஆகவே, தூக்கிய பாதம் அனுக்ரகம் அல்லது அருளைக் குறிக்கின்றது.

ஆகவே, நடராஜரது ஆனந்தத் தாண்டவம் பஞ்ச கிருத்தியத் தாண்டவம் என மதிக்கப்படும். இது கடவுளது ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அனுக்ரகம் ஆகிய ஆக்கல், அளித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந் தொழிலை நன்கு விளக்குகின்றது,

"தோற்றம் துடியதனில்
தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே
சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே
உற்றதிரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்னும் பாட்டும் இதனை விளக்கும். மேலும் இப்பெருமானது திருநடனம்,

"மாயை தனையுதறி
வல்வினையைச்சுட்டு மலம்
சாய அமுக்கி அருள்
தானெடுத்து—நேயமுடன்
ஆனந்த வாரிதியில்
ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பாதம்
தான்"

என்றபடி மாயையை அகற்றி, வினைகளைத் தொலைத்து, மலங்களை நீக்கி, மோட்சத்தைத் தருகின்றது என்பதைக் காட்டுகிறது. ஆதலால் நாம் நடராஜபெருமானின் திருவுருவச் சிறப்பினை நினைத்து வழிபட்டுய்வோமாக

# யோகம்

**ஸ்ரீ சுவாமி சிதானந்தா**

எல்லைக்குட்பட்ட ஜீவாத்மா எல்லைகடந்த பரமாத்மாவுடன் இணைவதற்கு யோகம் என்று பெயர்.

ஓர் ஆன்மாவின் உணர்வினை பரமான்மாவுடன் நிலைத்து நிற்கும்படி செய்தலே யோகம் எனப் படும். மழைநீர் ஆற்றின் வழி பாய்ந்து அதன் பிறப்பிடமாகிய கடலில் மீண்டும் கலப்பது போன்று பரமான்மாவினின்று தோன்றிக் கிளம்பிய ஜீவான்மா மீண்டும் அதன் தாயகத்தை யடைய முயற்சிக்கின்றது. தனித்து நின்ற ஆன்மா பரமாத்மாவுடன் இரண்டறக் கலத்தலே யோகமாகும்.

இப்பேற்றினையடையும் பொழுது இதயத்தின் முடிச்சுகள் அல்லது கட்டுகள் துண்டிக்கப்படுகின்றன. அதன் பொருள் யாதெனின் எல்லா வகைத் தொல்லைகளும் கழன்று விடுகின்றன. அதன் விளைவாக எல்லையில்லாப் பேரின்பமும் மேலாம் அமைதியும் வந்தடைகின்றன.

பின் உனக்கு எதுவும் தேவைப் படாது. நீ பேராசைகளினின்றும் விடுதலை பெற்றுவிட்டாய். நீயே ஓர் பரிபூரண நிலையில் இருப்பதை உணர்வாய். அதுவே உனது யோகத்திற்கான முயற்சியின் முடிவாகும்.

இம்மண்ணின் மீதுள்ள பொருள்கள் யாவும் மறைந்து மாய்ந்து விடுகின்றன. ஆதலால் அவைகள் அனைத்தும் நிலைத்த இன்பத்தை தரமாட்டா, தர முடியா. இன்ப அநுபவம் நின்று விட்டபொழுதே அங்கு ஏமாற்றம் உண்டாகும். அதன் காரணமாகத்தான் மகான்கள் “ஸர்வம் துக்கம் விவேகிஞ” என்று கூறியுள்ளனர்.

பகுத்தறிவு படைத்த மனிதன் இவ்வுலகம் துன்பம் நிறைந்தது என்று குறிப்பிடுகின்றான். ஆகவே இத்தகு வாழ்வில் மனிதன், உண்மை இன்பத்தைக் காண முடியாது. இருப்பினும், அவன் துன்பந்தொடரா இன்பத்தினை பெற முயற்சிக்கின்றான்.

ஆதலால் அருந்தவத்தோர்கள், வீட்டின் உச்சிமீது நின்று கொண்டு “ஓ மானிடர்களே! விழித்தெழுங்கள். எங்கள் செய்தியினைக் காது கொடுத்துக் கேளுங்கள். அழியாப் பேரின்பத்தை

நீங்கள் எங்கு அநுபவிப்பீர்களோ, ஆங்குள்ள பரம்பொருளை நாங்கள் கண்டுகொண்டு உள்ளோம். நாங்கள் அடைந்துள்ள அப்பெருநிலையினை நீங்களும் பெறுங்கள்" என்று இடி முழக்கஞ் செய்கின்றனர்.

எனவே, பரம்பொருளின் பேரின்பத்தினை, யோகத்தின் உன்னத அருட்கனியினை எவராலும் வர்ணிக்க வொண்ணாது. ஆகவே அவர்கள் அதனைத் தனிப் பெரும் ஆனந்தம் என்று கூறுகின்றனர். அவர்களால் அதனை எடுத்துரைக்க இயலாது. உச்ச உணர்வு நிலைக்கண் பழுத்த முடிவான திகட்டாக்கனி அது. யம, நியம, ஆசன, பிராணாயாம பிரத்யாகார, தாரணா, தியான, ஸமாதி ஆகிய எட்டு நிலைகளையும் பயிற்சியின் மூலம் கைவரப் பெற்ற ஓர் இராஜ யோகிக்கு கிட்டும் கனியும் அதுவே.

உனது தனித்த சுயநல உணர்வினைச் சுட்டுச் சாம்பலாக்கும் அளவிலா ஆனந்த மாகும் அது. இப்பேரானந்தத்தினைப் பெறும் ஒருவன் எதனையும் வாய்விட்டுச் சொல்ல முடியாது. அவன் உண்மையிலேயே ஊமையாகிவிடுகின்றான். எடுத்துக்காட்டாக ஊமையன் ஒருவனுக்கு நீ இனிப்புச் சுவை மிகுந்ததோர் பண்டத்தினை வழங்குகின்றாய். அச்சுவையினை அவனால் எடுத்துரைக்க இயலுமா? யோகியானவன் தானாகக் கலந்து நிற்கும் மேலாம் பேரின்பத்தின் குறிப்பினை அது உனக்கு வழங்குகின்றது.

பல்வகைத் துன்பங்கள், தொல்லைகள், ஆகியவற்றினின்று தப்பித்து, மாயவாழ்வால் உண்டான கட்டினின்று என்றும் நிலையான விடுதலை பெற்று அச்சமனைத்தையும் ஏன் மரணத்தையும் இறுதியாக வெல்வதற்கு மனிதனால் உணரப்பட்ட அவசியத்தின் மீது யோகம் அடிமனையை அமைக்கின்றது. இம் மாபெரும் சிக்கலுக்குச் செயல் படுத்தும் தீர்வாக யோகம் பயன் படுகின்றது.

மனிதனுக்கும் எல்லையற்ற பரம் பொருளுக்கும் இடையே இழந்து விட்டத் தொடர்பினை, உறவினை அது உண்டாக்குகிறது. மனிதன் முக்கிய அம்சமாக ஆனந்தம், பூரணத்துவம், அமைதி, விடுபட்ட தன்மை ஆகியவற்றைக்கொண்ட இயல்பினன் என்று யோகம் தெளிவாக எடுத்துரைக்கின்றது அப்பரம்பொருளோடு அவன் என்றும் அமரத்வம் பெற்றவன். அவனது இருப்பு வற்றா ஊற்றாக நிறைபொருளாயுள்ள பரம் பொருளுடன் மனிதன் ஒன்று பட்ட தன்மையன் என்பதை மறந்துவிட்ட காரணத்தினால் தான் உலகியல் வாழ்வில் அவன் சிக்குண்டு தூண்டிலில் அகப்பட்ட மீனைப் போன்று துடிக்கின்றான்

உண்மை நிலையினைப் புரிந்து கொண்டு இறைவனுடன் நிலையான ஒன்றுபட்ட தன்மையினை

மீண்டும் உணருவதற்கு உண்மையில் மனிதனுக்கு உதவுவது யோகப்பயிற்சியாகும். இம் மண்ணுலக வாழ்வின் குற்றங்குறைகளைக் கடந்து இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்கான அனுபவம் யோகப் பயிற்சியில் அடங்கியுள்ளது. கீழ்மை இயல்பின் குறைபாடுகளை எவ்வாறு கடந்து மனத்தையும், புலன்களையும் அடக்கி ஒடுக்கி வெற்றி பெற வேண்டும் என்பதையும் யோகம் காட்டுகின்றது.

நேர்மைப் பண்பு, ஒழுக்கப் பண்பு ஆகியவற்றில் முழு அளவில் தூய்மை பெறுதலைத்தான், யோகப் பயிற்சியில் உள்ள நுணுக்கங்கள் யாவும் விரும்புகின்றன. யோக வாழ்விற்கான அடித்தளம் உள்ளத் தூய்மையே. ஒருவன் தீயோனாக விருந்துகொண்டு யோகத்தைப் பயில முயர்சித்தல் கூடாது. ஒருவன் மாசுபடர்ந்த மனத்தினனாக, நாணயமற்றவனாக, பொய்யனாக, வஞ்சகம் நிறைந்தவனாக, பிறருக்குத் தீங்கு செய்வோனாக, தன்னை வளர்த்திக் கொண்ட அதே நேரத்தில் யோகத்தைப் பயில முடியாது; கூடவும் கூடாது.

மனத்தகத்தே குறைபாடுகளாகிய அழுக்குகள் மண்டிக் கிடக்கும் பொழுது மெய்யுணர்வாம் இறைவுணர்வைப் பெறுதல் என்பது முடியாத செயல். அவனிடத்தே அறப்பண்பு ஆழ்ந்து வேரூன்றாத போது, சமயத்தையொட்டிய சாதனையோ அல்லது உண்மையான ஆன்மீக வாழ்வோ அவனிடம் பொருந்துவது கடினம். நன்மை, தூய்மை, உண்மை, தன்னலமற்ற தன்மை ஆகியவற்றில் ஒருவன் வேரூன்றி நிற்றல் வேண்டும்.

சன்மார்க்க நெறியிலே நின்று ஒருவன் முழு அளவில் நிலை கொண்டு விட்டால் அவன் யோக நிலையில் பாதி தூரத்தினைக் கடந்தவன் ஆவான். ஓர் உலர்ந்த குச்சியினைத் தீப்பெட்டியின் மீது உறைத்ததும் தீப்பற்றி எரிகின்றதைப் போன்று அறவொழுக்கம் அடிமனையாக அமையும் பொழுது யோகத்திற்கான நுணுக்கங்களை நடைமுறைக்குக் கொண்டுவருதலும் எளிதே. இவ்வடிப்படை இல்லையேல் சோப்புக்கட்டி ஒன்றின் மீது ஈரமுள்ள குச்சியினை உறைத்துத் தீ கொளுத்துவது போலாகும். அதாவது ஒன்றும் நடைபெறாது.

யோக வாழ்விற்கான அனைத்து நிலைகளிலும் தலைசிறந்த மூலாம்சம் இறைவன் திருவருளே. நீ விரும்பும் விதத்தில் அதற்குப் பெயரிட்டுக் கொள். உன்னத சத்பொருளாகவும் அனைத்து உயிர்களுக்கும் மூலப் பொருளாகவும் உள்ள பரம் பொருளின் திருவளின் இடத்தே தான் மனிதன் அவனது உண்மை இயல்பையும் மரணமிலாப் பெருநிலையாம தெய்வீகத் தன்மையையும் உய்த்துணருகின்றான்.

யோகம் மனிதனை திசை திருப்பி ஆண்டவன் பால் நாட்டங்கொள்ளச் செய்து அவனுடன் இரண்டறக் கலக்கும் பான்மையுடையது. பயிற்சிகள் அனைத்தும் நோக்கமுடையனவே. யோகத்தின நோக்கமும் அதுவே.



# திருவேங்கட முடையான்

திருமதி தேவகுமாரி எதிராஜன் எம்.ஏ.,

ஸ்ரீமந் நாராயணன் பல இடங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிறார். இவைகளுள் 108 தலங்களுக்கு ஆழ்வார்களின் பாடல்கள் உண்டு. ஆழ்வார்களால் பாடப் பெற்ற இத் தலங்களைத் திவ்ய தேசங்கள் என்பார்கள். இவற்றுள் திருவேங்கடம் ஒன்று.

திருவேங்கடம் மிகவும் புனித திவ்ய தேசமாகும். வேம்+கடம் என்றால், பாபங்கள் வேகும் கடம் என்று பொருள். அதாவது திருவேங்கடம் சென்று தரிசிப்பவர்களுடைய சகல பாபங்களும் தீர்ந்து போகும்!

வேம்கடம் என்றால் அழிவற்ற ஐசுவரியம் என்றும் பொருள். அதாவது, அழிவற்ற ஐசுவரியமான திருமால் எழுந்தருளியுள்ளத் தலம் என்று பொருள் படும்.

திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானைத் திருவேங்கட முடையவன் என்று பக்தர்கள் அழைப்பார்கள். பாமரர்கள், ஏழுமலையான் என்று ஏத்துவார்கள்.

திருவேங்கட முடையான் ஏன் திருமலைமேல் நிற்கிறான்? உலகத்தை வாழச் செய்வதற்காகவே நிற்பதாகப் பெரியாழ்வார் விளக்கம் தருகிறார்!

சென்னி ஓங்கு தண் திருவேங்
கடம்
உடையாய்! உலகு
தன்னை வாழ நின்ற நம்பி!

இப்படி ஏழுமலைவேல் எல்லா செல்வங்களுடனும் எழுந்தருளியுள்ள திருவேங்கட முடையான் நமக்குக் கிடைப்பாரா?

ஆம்! பயப்பட வேண்டாம்! இடைச்சியான யசோதை கையில் அகப்பட்டுக் கொண்டு, அவளால் தன் வயிற்றைச் சுற்றித் தாம்புக் கயிற்றால் கட்டப்பட்டுத் தூணில் கட்டி வைக்கும்படியாக, எளிமையாக இருந்தானே; அந்தக் கண்ணன்தான் இந்தத் திருவேங்கட முடையான்! எனவே நாமும் அவனைப் பக்திக் கயிற்றால் கட்டி விடலாம்!

...........தாமோதரா!

"இப்படி அகப்பட்டுக் கொள்ளும் இவனுக்குத் தம்மை வழிபடு

பவர்களின் குறைகளை நீக்கத் திறமை உண்டா?" என்று சந்தேகம் பிறக்கலாம்! இவன் வெகு கெட்டிக்காரன்!

இப்படிப் பரம சுலபனுகவும், சகல ஆற்றல்களும் உடையவனுக உள்ள திருவேங்கடமுடையானிடம் நாம் செய்ய வேண்டிய கடமை என்ன? அவன் சக்கரச் சின்னத்தை நம் மீதும் நம்பொருள்கள் மீதும் பொறித்து, அவனையே சரணமாகக் கொண்டு இருக்க வேணும் என்று பெரியாழ்வார் தம் பாடலை முடிக்கின்றுர்!

என்னையும் என் உடமையையும்
உன் சக்கரப் பொறி ஒற்றிக்
கொண்டு
நின் அருளே புரிந்து
இருந்தேன்!
இனி என்! திருக் குறிப்பே!

* * *

நாம் சரணம் புகத் திருவேங்கடமுடையானே மிகவும் ஏற்றவன். காரணம் என்ன? அவன் திருமார்பில் திருமகள் எப்போதும் எழுந்தருளி இருக்கிறுள். அதனுல் திருவேங்கடமுடையான் திருவுள்ளத்தில் எப்போதும் கருணை நிரம்பி இருக்கும்! ஒருபோதும், ஒருவரையும் தள்ளி அகற்றமாட்டான். இப்படி யாரையும் தள்ளி அகற்றுமல் இருப்பதற்கே "எப்போதும் பிரியேன்!" என்று கங்கணம் கட்டிக் கொண்டுத் திருமகள் அவன் மார்பில் உறைகிறுள்! ஸ்ரீனிவாஸன், என்றுல் 'திருமகள் எப்போதும் விட்டு அகலாது நித்ய வாஸம் புரிபவள்' என்று பொருள்.

திருவேங்கட முடையானைச் சரணம் அடைகிறுர் நம்மாழ்வார். திருமகள் நித்ய வாசம் செய்யும் மார்பை உடையவன் அல்லவா அவன்! என்னை விலக்க மாட்டானே அதனுல் என்கிறுர்!

அகல கில்லேன் இறையும்!
என்று
அலர்மேல் மங்கை உறை
மார்பா!

திருவேங்கட முடையானுக்கு என்ன புகழ்? எவ்வளவு பாபிகள் ஆனுலும், தன் கருணையால் அவர்களை அங்கீகரித்து அருள் செய்கிற புகழ் உடையவன். கன்றின்மீது பாசம் உடைய பசு. அதன் உடம்பில் என்ன அழுக்கு இருப்பினும் அவைகளைத் தன் நாக்கால் நக்கிச் சுத்தம் செய்து புனிதம் ஆக்குவது போல!

............நிகறில் புகழாய்!

இப்படியான திருவேங்கடமுடையான் பக்தர்களை ஆட்கொள்ளச் சக்தி உடையவனு? அவனுக்கு மூன்று உலகங்களும் ஆட்பட்ட சொத்து அல்லவா? அவனைக் காட்டிலும் மூன்று உலகங்களிலும் மேன்மையான ஒருவன் இல்லை.

உலகம் மூன்று உடையாய்!

பக்தர்களுடைய பாபத்தைப் போக்கும் மனம் இருக்கலாம். சக்தியும் இருக்கலாம். பரம நீசனுன என்னையும் ஆட்கொள்வானு? அந்த சந்தேகம் வேண்டியதில்லை!

என்னை ஆள்வானே!

இப்படிப் பரம கருணு மூர்த்தியான இறைவன் நமக்குக் கிட்டுவானு? இதோ! அவன் மிக எளிமையாக, நாம் சென்று வணங்கும்படித் திருமலையில் அல்லவா எழுந்தருளி நித்ய சேவை புரிகிறுன! அவனை எவ்வளவு பெரியவர்கள் வந்து அணி அணியாகச் சேவிக்கின்றனர்!

நிகரற்ற அமரர்களான தேவர்கள் வந்து வணங்குகின்றனர்! முனிவர்கள் கூட்டம் கூட்டமாக வந்து தவங்கிடந்து சேவிக்கின்றனர்!

நிகறில் அமரர், முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்
தானே!

"காத்துக் கொள்வதற்கு வேறு கதி இல்லாத நான், உன் திருவடிகளில் வந்து சரணம் புகுந்தேன்!" என்று பாடலை முடிக்கிறார் நம்மாழ்வார்!

புகல் ஒன்று இல்லா அடியேன் உன்
அடிக் கீழ் அமர்ந்து புகுந்
தேனே!

இத்தகைய பெருமை வாய்ந்த திருவேங்கட முடையானுக்கு நாம் எப்போதும் உடன் இருந்து தொண்டு செய்து வாழவேண்டும் என்று போதிக்கிறார் நம்மாழ்வார்!

ஒழிவு இல் காலம் எல்லாம்
உடனாய் மன்னி!
வழுவு இலா அடிமை செய்ய
வேண்டும் நாம்!
தெழி குரல் அருவித் திருவேங்
கடத்து
எழில் கொள் சோதி எந்தை
தந்தை தந்தைக்கே!

—நன்றி: பக்தன்



# திருவஹீந்திரபுரம் ஸ்ரீ தேவநாத ஸ்வாமி திருக்கோயில் மஹா ஸம்ப்ரோக்ஷணம்

"நாட்டினுன் தெய்வமெங்கும் நல்லதோர் அருள் தன்னுலே" என்கிற மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார் பாசுரம் கூறுவதை மெய்யாக்க, அடியவர்க்கு மெய்யனென்றே திரு நாமம் பூண்டு, திருவயிந்திரத்து வந்து ஓர் 'இன்னமுதக் கடலாகி' ஒப்பற்ற ஓர் "மேவுசோதி"யான தெய்வ நாயகன் அருள்தர வெண்ணி அயிந்தையில் வந்தமர்ந்து தம் வடிவழகு, மறவாதாரை பிறவாதாராக்கி, எல்லையில்லா அருள் தருகிறபடியாலே, ஆழ்வாரும், ஸ்ரீமத் வேதாந்த தேசிகரும் பாசுரங்களிட்ட பெருமையோடு பக்தர்களுக்கு "பின்னுரூர் வணங்கும் சோதி" என்று புகழ்பெற்ற அதிஸவுந்தர்யமான திவ்ய மங்கள விக்ரஹத்துடன் (அர்ச்சாவதாரம்) நித்ய ஸாந்நித்யம் செய்து வருகிருர். இவ்வெம்பெருமான் திறத்து மோஹித்து வேதாந்த தேசிகரும் பெண்தன்மை பூண்டு நாயிகாபாவத்தாலே, மும்மணிக் கோவை பந்துப்பா, கழற்பா, அம்மானேப்பா, ஊசற்பா, ஏசற்பார் நவரத்னமாலை முதலிய பாசுரங்கள் அருளியதாய்த்-தெரியவருகிறது. "சிந்தைகவர் ப்ராக்ருதம்" என புகழப்பெற்ற ப்ராக்ருத பாஷை பிரபந்தம் (வேறு எந்த எம்பெருமானுக்கும் எந்தவேறு ஆசாரியரும் செய்யாதது) நூறும், தெய்வநாயக பஞ்சாசத் என்கிற 50 வடமொழி பாசுரங்களேயும் இவ்வாசிரியர் அளிந்துள்ளார் எனில் இவ்வெம்பிரான் பெருமையை என்னென்று சொல்ல இயலும்!

இங்குதான் ஸ்ரீ வேதாந்த தேசிகர் தவமியற்றி "வெள்ளேப் பரிமுகர்" என்கிற வித்யா தேவதையான ஹயக்ரீவரை மந்திரத்துடன் கருடன் மூல்யமாய் பெற்ருர் என்பதுவும் வரலாற்று பிரஸித்தமானது.

இவ்வாசாரியரை ஸ்ரீ தெய்வ நாயகன் "முந்தை மறை மொய்ய வழி மொழி நீ" என உத்திரவு இட்டதுவும், அதன் காரணமாகவே ராமாநுஜ மதத்தைத் சததூஷேணி, ஸர்வார்த்தஸித்தி

முதலாகிய விசேஷ க்ரந்தங்களாலே காப்பாற்றினார் இவ்வாசிரியர் என்பதும் உலகறிந்த உண்மையாகும்.

பூமறையோன் பாராயணத்திற் பணியுமயிந்தை (பிரம்மாண்ட புராணம்) என்று புகழ்ந்துள்ளார் இத்தலத்தை இவ்வாசிரியர். திருக்கிணறு கட்டியும் தம் திருமேனி அர்ச்சை பிரதிஷ்டை செய்ததுவும் இங்கேயே ஆதலால் இவ்வாசிரியராலேயே இத்தலத்துக்கு வழங்கியுள்ள சான்றுகள் எண்ணிலடங்கா.

ஸௌந்தர்ய மூர்த்திகளான ஸ்ரீராமன், ரகுவீரகத்யமும், ஸ்ரீ ராஜகோபாலன், "கோபால விம்சதியும்" இவ்வாசாரியரிடமிருந்து பெற்றுள்ளார்கள்.

ஒரே முகூர்த்தத்தில் ஸ்ரீ பெருமாள், தாயார், ஸ்ரீ கோபாலன், ஸ்ரீ கோதண்டராமன் "பள்ளி கொண்டநாதன்", ஸ்ரீ ஆண்டாள், ஸ்ரீமத் ஆழ்வார்கள் ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் ஆகிய எல்லா விமானங்களும் (சுமார் 2 லக்ஷரூபாய் செலவில் புதுப்பிக்கப்பட்டு) ஸம்ப்ரோக்ஷணை 17-5-72ல் ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவன் திருமுன்பு மஹா ஸம்ப்ரோஷணம் மிகவும் விமரிசையாக நடைபெற்றது.



# விபூதியும் ருத்ராக்ஷமும்

**சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்**

ஸ்ரீ பரமேச்வரனுடைய அனுக்ரஹம் யாவருக்கும் தேவை. ஏன் என்றால் ஸ்ரீ பரமேச்வரன் காலகாலன்ம்ருத்யுஞ்ஜயன். யாவரும் ம்ருத்யுபயம் வேண்டாமென நிச்சயமாக நினைப்பதே யாகும். மிருத்யுபயத்தைப் போக்குவதில் ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்திரமும் ஒன்றுகும். ஸ்ரீபரமேச்வரன், பஞ்சாக்ஷரம் இவ்விரண்டிற்கும் மிருத்யுபயத்தைப் போக்குவதில் எவ்வளவு சக்தி உண்டோ, அவ்வளவு சக்தி விபூதிக்கும் ருத்ராக்ஷத்திற்கும் உண்டென சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஆதலால்தான் மஹான்கள் எப்பொழுதும் விபூதி ருத்ராக்ஷத்தைத் தரிப்பார்கள். நல்ல பக்தி உள்ள குடும்பங்களில் ஸுமங்கலிகள் கூட விபூதி ருத்ராக்ஷத்தை தரித்து வருகிறார்கள். அவர்கள் அதனால் ஸகல க்ஷேமங்களையும் அடைந்தும் வருகிறார்கள்.

தமிழிலும் பக்தர்கள் மந்திரமாவது நீறு எனப்பாடுவார்கள். அதாவது பஞ்சாக்ஷரம் வேதங்களின் ஸாரம். அந்த ஸாரமான பஞ்சாக்ஷர மந்திரமே விபூதி என்றால் ஐச்வர்யம் என நிகண்டு கூறுகிறது.

விபூதி ருத்ராக்ஷம் தரித்தவர்களிடத்தில் பூதப்ரேத பிசாசங்கள் அணுகுவதில்லை.

மூன்று விரல்களால் விபூதி தரித்தவனை பூதம் ப்ரேதம் முதலிய பிசாசுகள் பயந்து நடுங்கி நிச்சயம் ஓடிவிடும். இதில் ஸந்தேஹமில்லை. பராசரஸ்மிருதியிலும், பரமேச்வரன் மஹாவிஷ்ணு முப்பத்து முக்கோடி தேவர்கள் பார்வதி மஹாலக்ஷ்மி ஸரஸ்வதி இவர்கள் யாவரும் விபூதி தரிப்பதால் ஆனந்த மடைந்து அருள் புரிகின்றனர்.

விபூதி என்றால் பசுவின் சாணியை உருண்டையாக உருட்டி வெய்யிலில் காய வைத்து அக்னிஹோத்ரிகள் மூன்று அக்னிகளிலும் வைத்து மந்திரத்தினால் ஹோமம் செய்து அந்த கர்மா முடிந்ததும் பின் தினந்தோறும் சேர்த்து வைப்பார்கள். அந்த அக்னிஹோத்திர பஸ்மம் மிகச் சிறந்ததாகும்.

மஹாசிவராத்திரியன்று பசுவின் சாணியினால் செய்த முட்

டான்களை நிரம்ப சருக்காய்களை பரப்பி அவைகளை அடுக்கி அக்னிஜ்வாலை உண்டு பண்ணி விரஜா ஹோமத்தை சாஸ்திர முறைப் படிச் செய்து அதனுல் உண்டு பண்ணுவதும் உண்டு. அதே போல்ஔபாஸனுக்னியில்வைத்த முட்டான்களையும் உபயோகப் படுத்தலாம். மஹா சிவராத்திரியில் விரஜாஹோமத்தைச் செய்ய முடியாவிடினும் நல்ல நாள் பார்த்து அதில் செய்து விபூதி உண்டு பண்ணலாம்.

இதுமாதிரியான விபூதியைத் தான் நமது ஜகத்குரு ஆசார்யாள் உபயோகப்படுத்துவார்கள். மற்றுமுள்ள யதிகளும் அக்னிஹோத்ரிகளிடமிருந்து அக்னிஹோத்திர விபூதியை வாங்கி உபயோகப்படுத்துவார்கள். சிறு குழந்தைகள் முதல் எல்லோரையும் வெளியில் புறப்படும்போது விபூதி தரித்து புறப்படச்சொல்லுவார்கள். அப்படிச் செல்லுகிறவர்களுக்கு யாதொரு தீங்கும் வருவதில்லை.

காலாக்னிருத்ரோப நிஷத்தில்- விபூதியை மூன்று புண்ட்ரமாய் தரித்துக்கொள்ளும் விபூதி மஹிமையை அறிந்தவன் பிரம்மசாரியோ கிரஹஸ்தனே வானப்ரஸ்தனே ஸன்யாஸியோ ஸமஸ்தமான மஹாபாதகங்கள் உப பாதகங்கள் இவைகளிலிருந்து விடுபட்டு பரிசுத்தனுக ஆகிறுன். அவன் தேவர்கள் யாவரையும் தியானம் செய்தவனுக ஆகிறுன். எல்லா புண்யதீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்த புண்யத்தை அடைகிறுன். எட்டு வித ஸம்பத்துக்களின் ஸமிருத்தியையும் அடைகிறுன். இடைவிடாது ஸகல மந்திரங்களையும் ஜபித்தவனுக ஆகிறுன். ஸகல போகங்களையும் அனுபவித்து முடிவில் சிவ ஸாயுஜ்யத்தை அடைந்து விடுவான். மறுபடி திரும்பிவர மாட்டான் என காலாக்னிருத்ரனுன ஸ்ரீபரமேச்வரன் கூறுகிறுர்.

அதர்வசிரஸிலும் ஜாபால உபநிஷத்திலும் கூறியிருப்பதாவது— விபூதியை கையில் எடுத்து வைத்துக் கொண்டு ஜபிக்கவேண்டிய மந்திரமாவது—

அக்நிரிதி பஸ்ம
வாயுரிதி பஸ்ம
ஜலமிதி பஸ்ம
ஸ்தலமிதி பஸ்ம
வ்யோமிதி பஸ்ம
ஸர்வம் ஹவா இதம் பஸ்ம
மந இத்யேதாநி சக்ஷூம்ஷி
பஸ்மா நி

இந்த மந்திரத்தால் விபூதியை தலை முதல் எல்லா அங்கங்களிலும் ஜலம் விடாமல் பூசிக் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வதற்கு பாசுபத வ்ரதம் என்று பெயர். இதனுல் அக்ஞானம் விலகி பந்தமும் விலகும்.

விபூதியை மூன்று கோடுகளாக இட்டுக்கொள்ளவேண்டும். அதில் மேல் புண்ட்ரம் ஸாமவேத ஸ்வரூபமாகும். நடுவில் யஜுர்வேத ஸ்வரூபமாகும். அடியில் ரிக்வேத ஸ்வரூபமாகும். ஆதலால் தான் இதற்கு த்ரியாயுஷம் எனப் பெயர்.

இந்த மந்திரத்தால் நெற்றியிலும் இரண்டு கைகளிலும் தொப்புளிலும் தலையிலும் மார்பிலும் இரண்டு பக்கங்களிலும் வேதத்தை நம்பின பிராமணன் எப்பொழுதும் தரிக்கவேண்டும். போதாயனமஹரிஷியும்—

ஆசார்யன் சிஷ்யனுக்கு வேதங்கள் உபதேசித்து வீட்டுக்கு அனுப்

பும் சமயத்தில் உபதேசம் செய்யும்போது பூத்யை நப்ரமதிதவ்யம்—என்ற பதத்திற்கு அர்த்தம் கூறும்போது விபூதியை தரித்துக் கொள்வதை நிறுத்திவிடாதே என உபதேசித்ததாகக் கூறியுள்ளார்.

மேலும் விபூதியை மூன்று பட்டையாக இட்டுக்கொள்வதால் மஹாபாபங்கள் விலகுமென்றும் இது கையினுல் இட்டுக் கொள்ளும் முறை என்றும் போதாயன முனிவர் கூறுகிருர்.

த்ரியம்பகம் யஜாமஹே
ஸுகந்திம் புஷ்டிவர்தனம்
உர்வாருகமிவ பந்தநாந்ம்
ருத்யோர் முக்ஷிய மாம்ருதாத்

என்ற மந்திரத்தால் ஸர்வ அங்கங்களிலும் விபூதியை பூசிக் கொள்ள வேண்டும். இதனுல் பரிசுத்தனுகி தனக்கு முன் பத்து தலே முறைகளும் தனக்குப்பின் பத்து தலேமுறைகளும் தானும் சேர்ந்துஇருபத்தோரு தலேமுறை பரிசுத்தமாக்குகிருன். இவன்ஆகாரம் செய்யும் போது இவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து ஆகாரம் உட்கொள்ளும் அனேவரும் பரிசுத்தமாக்கப்படுகிருர்கள்.

பரத்வாஜமுனிவரும் — விபூதியைத் தரிப்பதற்கு முன்பு கை கால்களே அலம்பி ஆசமனம் செய்து பரிசுத்தமானபின் நெற்றியில் குறுக்காகவும் அதேபோல் வயிற்றிலும் கழுத்திலும் அக்னி ஹோத்திரத்திலுண்டான விபூதியையே பஞ்ச பிரம்மம் என்ற ஸத்யோஜாதம் மந்திரங்களால் தரிக்கவேண்டும். இம்மாதிரி திரிபுண்ட்ரமாக தரித்துக்கொண்டால் செய்யும் கர்மாக்கள் யாவையும் செய்வதற்கு பரிசுத்தனுகி அதிகாரியாவான். திரிபுண்டரத்தை எப்பொழுதும் தரிக்க வேண்டும். அதனுல் ஸகல பாபங்களும் விலகிவிடும். இம்மாதிரி விபூதியைத் தரித்துக்கொள்ளாமல் செய்யும் கர்மாக்கள் பயனில்லாமல் ஆகிவிடும்.

காத்யாயந முனிவரும்—ச்ராத்தம் செய்யும்போதும் யாகம் செய்யும் போதும் ஜபம் செய்யும் போதும் ஹோமம் செய்யும் போதும் வைச்வதேவம் செய்யும் போதும் தேவ பூஜை செய்யும் போதும் விபூதியை தரித்துக் கொண்டு பரிசுத்தனுகி யமனே ஜயித்து விடுகிருன்.

வேறு ஸ்மிருதியிலும் விபூதியை த்ரிபுண்ட்ரமாய் தரிப்பது மிக புண்யமாகும். அம்மூன்று கோடுகளும் பிரம்மா விஷ்ணு சிவன் இவர்களின் ஸ்வரூபமாகும். பயங்கரமான ராக்ஷஸர்கள் மற்றும் மட்டமான துஷ்ட கிரஹங்கள் எல்லாம் விபூதியைத் தரித்தவனேக் கண்டு ஓடிவிடுவார்கள். இதில் சந்தேஹமில்லே.

திரிபுண்ட்ரமாக விபூதியைத் தரித்துக்கொள்ளும் போது ஸ்ரீபரமேச்வரனே மனதினுல்தியானம் கொண்டு தரிப்பவனுன மஹாத்மாவால் மூன்று உலகங்களும் தரிக்கப்பட்டதாக ஆகின்றன.

மேலும் விபூதி ருத்ராக்ஷத்தைத் தரிக்கும் பிராமண சிரேஷ்டன் பரிசுத்தனுக ஆகி உலகில் ஏற்படும் வியாதி பாபம் பஞ்சம் திருட்டு இவைகளே எல்லாம் வராமல் தடுத்து விடுவான். இம்மாதிரி விபூதி ருத்ராக்ஷம் தரிப்பவன் திரும்பி வராத பரப்பிரம்மத்தை அடைவான்.



# ஒரு நிமிஷம் என்ன சாதாரணமா ?

ஒரே ஒரு நிமிஷம் பொறுத்துக்கொள்ளுங்கள். இதோ வந்து விட்டேன் என்று காத்திருக்கும் அன்பு கணவனிடம் மனைவி கூறு வதைக் கேட்டிருக்கின்றோம். ஆனால் ஒரு நிமிஷத்திற்குள் எவ்வளவு காரியங்கள் நடந்துவிடுகின்றன என்பது அநேகருக்குத் தெரிந்து இருக்காது. அது பற்றித் தகவல் சேகரித்து மேற்கு ஜெர்மன் நிபுணர்கள் புள்ளி விவரமாக வெளியிட்டு இருக்கின்றார்கள்.

ஒரு நிமிஷந்தானே! என்ற அலட்சியம் கூடாது. ஒரு நிமிஷத் தில் 60 விநாடிகள் அடங்கி உள்ளன. ஆனால் இந்த ஒரு நிமிஷத்தில் நிறைய காரியங்கள் நடைபெறுகின்றன.

ஒரு நிமிஷத்தில் 6000 விண் கற்கள் பூமிநோக்கிப் பாய்கின்றன. பூமி தன்னைத்தானே சுற்றிக் கொள்வதில் 950 மைல் தூரம் கடந் திருக்கும். சுமார் 38 புயல்கள் உருவாகியிருக்கும். 14.000 கன அடி மழை உலகின் பல பாகங்களில் பொழிந்து இருக்கும் நதிகள் ஒரு நிமிடத்தில் 35,000 டன் தண்ணீரையும், வண்டலையும் கடலில் சேர்த்திருக்கும்.

ஒரு நிமிஷத்தில் உலகில் சுமார் 100 பேர்கள் மாண்டிருப் பார்கள். 114 குழந்தைகள் பிறந்திருக்கும். 34 திருமணங்கள் நடைபெற்றிருக்கும். மூன்று தம்பதிகள் விவாக ரத்து செய்து கொண்டிருப்பர்.

ஒரு நிமிஷத்தில் உலகம் முழுவதிலும் 2,80,000 டெலிபோன் மணிகள் ஒலித்திருக்கும். 60 லட்சம் சிகரெட்டுகள் புகைக்கப்பட்டி ருக்குமென்றும், 1,10,000 பத்திரிக்கைகள் வாங்கப்பட்டிருக்கு மென்றும் நிபுணர்கள் கணக்கிட்டு இருக்கிறார்கள். ஒரு நிமிஷத்தில் 6,38,000 காலன் மதுவை மனிதர்கள் குடித்திருப்பார்கள். 4000 டன் உணவுப் பொருள்கள் உட்கொள்ளப்பட்டிருக்கும் என்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஒரு நிமிஷத்தில் 3000 டன் நிலக்கரி, 700 டன் இரும்பு எஃகு எடுக்கப்பட்டிருக்குமாம். 4600 ஜோடி செருப்புகள் தைக்கப் பட்டிருக்கும். 68 புது மோட்டார் கார்கள் உற்பத்தி செய்யப் பட்டிருக்குமாம். இந்தப் புள்ளி விவரங்கள் எல்லாம் மேற்கு ஜெர்மன் பத்திரிக்கை ஒன்றில் வெளியாகியிருக்கிறது.

தொகுப்பு :

திரு. டி. எஸ். கருப்பையா

— நன்றி. T. V. S. செய்தி

# பகவத்கீதை

## (வினா, விடை)

பகவத்கீதை என்பது என்ன? அது எப்பொழுது எவ்விதம் வெளியாயிற்று?

கிருஷ்ணபகவானால் அர்சுனனுக்கு விளக்கப்பட்ட நன்மொழிதான் பகவத்கீதை என்பது. இது 18 அத்தியாயங்கள் கொண்டது; 700 ச்லோகங்கள் உள்ளன. பாரதப் போரில் சண்டை துவங்குமுன், அர்சுனனுக்கு திடீரென்று உண்டான துக்கத்தைப்போக்க பகவானால் அருளப்பட்டது.

பாண்டவ கௌரவரது படைகள் குருக்ஷேத்ர மைதானத்தில் தண்டிரங்கியதும் என்ன என்ன ஏற்பாடுகள் நடந்தன?

பீஷ்மர், த்ரோணர் முதலியோர் தங்களுடைய 11 அக்ஷௌஹிணி படையை விதவிதமான அணிகளாக வகுத்து நிறுத்தினர். பாண்டவர்களோ தங்கள் அற்ப 7 அக்ஷௌஹிணியை ஒரே வஜ்ர அணியாகச் செய்து எதிரில் நின்றனர். அச்சமயம் இருபக்கங்களிலுமுள்ள வீரர்கள் தங்கள் தங்கள் சங்குகளை பலக்க ஊதினார்கள். போர்களம் முழுவதும் ஒரே சப்தமயமாயிற்று.

இச்சமயம் அர்சுனனுக்கு என்ன கவலை மூண்டது? ஏன்?

அப்பொழுது பார்த்தன் தன் சாரதியாயிருந்த கிருஷ்ணனை நோக்கி, துரியோதனனுக்கு உதவ வந்திருக்கும் வீரர்களைப் பார்க்க எண்ணி, தன் தேரை படைகள் இரண்டுக்கும் இடையே கொண்டுபோய் நிறுத்தும்படி வேண்டினான்; எதிரி பக்கம் கண் எடுத்தும் நோக்கினான். கண்ணுக்கு எட்டிய வரையும், உயிரிழக்க வந்திருப்பவர் யாவரும் தன் உறவினராவே இருப்பது கண்டு, அவனுக்குத் தன்னை அறியாமலே பெரும் துக்கம் வந்துவிட்டது; பித்துப் பிடித்தவன் போல் விழிக்கத்தொடங்கினான்; அசைவற்று நின்று விட்டான். "அநியாயமாய் எல்லா உறவினர்களையும் மாய்த்து விட்டு அரசாளாவிடில் என்ன? போரால் தீங்கு விளையுமே அல்லாது நன்மை ஒன்றும் இல்லை." என்ற எண்ணங்கள் தோன்ற அவன் உடல் பதறியது; சோர்வு உண்டாயிற்று; அவன் வில் காண்டீபம் கைநழுவியது. "என்னை எதிரிகள் இப்பொழுதே கொன்றாலும் சரி, நான் அவர்கள் பால் அம்பெய்யேன்" என்று அலறிக்கொண்டே தேர்த்தட்டில் சாய்ந்தான் அர்ஜுனன்.

அப்பொழுது பரமாத்மா என்ன செய்தார்?

பல்குணனின் துக்கம் தீர்க்க, அவனே வழக்கம் போல், ஆண்மை யற்றவன், எதிரிக்குப் பயந்தோடும் பேடி என கேலி செய்தார் பகவான். இவை ஒன்றும் பயனற்றதாகக் கண்டார். உலகில் தர்மத்தை நிலை நிறுத்த பொழுது வந்துவிட்டது என அறிந்தவராய், புன்னகையுடன், விஜயனே ஒரு காரணமாகக் கொண்டு, உலகத்தோர் எல்லோருக்குமே நலம் கொடுக்ககூடிய 'கீதையை' அருளினார்.

கீதையின் முதல் அத்தியாயத்தின் பெயரும் அதிலடங்கிய விஷயமும் என்ன?

முதலாவது அத்தியாயத்திற்கு 'அர்சுனவிஷாதயோகம்' என்று பெயர். நாம் முன்பே அர்சுனனின் துக்கமும் அதன் காரணத்தையும் விளக்கி விட்டோம்.

இரண்டாம் அத்தியாயம் 'ஸாங்கிய யோகம்' எனப்படும். இங்கு முதலில் பகவான் அர்சுனனே கேலிகள் மூலம் திருப்ப முயன்றார். பெரிதான துக்கத்தால் மதிமயங்கிக் கிடந்த அர்சுனன் பகவானிடம் நீரே எனக்கு இச்சமயம் நற்புத்தி புகட்டவேண்டும் என்று கெஞ்சிக் கேட்கலானன். இத்துயரம் விரைவில் நீங்க, பகவான், எவ்விடத்திலும் பரவி, எல்லா உயிர்கள் இடத்தும் இருக்கும் ஸத்தான 'ஆத்மாவின்' விளக்கத்தை, அவன் கேட்காமலிருக்கும் பொழுதே வெகு சிறப்பாய் அவனுக்கு எடுத்து உரைத்தார். 'ஆத்மா' அழிவற்றது; அழிவதாகவோ மறைவதாகவோ தோன்றுவது உடல்தான். இறப்பு என்பது ஆத்மவிஷயத்தில் ஒரு தோற்றமே. குழந்தை சிறுவனுவது; சிறுவன் ஆளாவது; பிறகு மூப்படைவது. இது போலவே, இறந்தபின் உடல் மாற்றமே தவிர வேறு ஒரு அழிவும் இல்லை. அவன் கொல்லப்படுகிறன், நீ கொல்லுகிறய், என்பதெல்லாம் மாயத் தோற்றங்களே தவிர உண்மைகள் அல்ல! இவ்விளக்கம் கேட்ட அர்சுனன் ஒருவாறு நிலைக்குவர அவன் அரசதர்மத்தின்படி போர் செய்தே தீர வேண்டுமென பகவான் தூண்டினார். இச்சமயங்களில் பெரியோர் நிலை எவ்வாறு இருக்கும் என்று அர்சுனன் வினவ, மஹான் 'ஸ்திதப்ரஜ்ஞன்' என்று சொல்லி அர்சுனனுக்கு விளக்கினார். ஸ்திதப்ரஜ்ஞன் உள்ளத்துறவு உடையவன்; இரட்டை பாவங்களிலிருந்து விடுபட்டவன்; எவ்விதப் பற்றுமின்றி, விருப்பு வெறுப்பற்றவன்; தன்னே அறியாமலே தனது அங்கங்களே உள் இழுத்துக் கொள்ளும் ஆமை குணத்தை போல், புலங்கள் உள் அடங்கும் 'கூர்ம விருத்தி' வாய்ந்தவன். மனத்தெளிவு முழுமையும் உள்ளவன். உலகம் முதலியவை பொய், பிரும்மாகிய பரம் பொருளே மெய் எனக் கொண்டோன்; அவன் நிலையே பிரும்ம நிலை. இந்நிலையில் சாகும் பொழுதாவது சற்று ஒருவன் இருப்பானேயானல் அவனுக்கு மோக்ஷம் கிட்டும்.

எல்லோருக்கும் இருளாக (விளங் காததாக) இருக்கும் பிரும நிலை ஸ்திதப்ரஜ்ஞனுக்கு பட்டப் பகல் போலவும் (நேரில் அறியக் கூடிய தாயும்), மற்றவருக்குப் பட்ட பகல் போலிருக்கும் உலக நிலை அவனுக்கு இருள் போலவும் காணப்படும்.

கீதை மூன்றும் அத்தியாயத் தின் பெயர் என்ன? சுருக்கம் என்ன?

இதற்கு 'கர்மயோகம்' எனப் பெயர். ஆத்மாவை யுணர்ந்து ஞானியாதல் மேலா அல்லது தர்மமென்று போர் முதலிய கொடும் செயல்களில் ஈடுபடுவது மேலா என்பது அர்சுனனின் கேள்வி. "முறையே ஞானயோ கம் துறவறத்தாருக்கும், கர்ம யோகம் இல்லறத்தாருக்கும் ஏற் பட்ட வழிகள். பரபரப்பான மனமுடைய அர்சுனன் போன்ற இல்லறத்தாருக்கு கர்மம் செய் யாது விடுதல் பெரும் பாபம். பல னில் ஆசைவிட்டு, ஈஸ்வரார் பணம் செய்து, கர்மங்களைக் கட மைப்படி செய்வதுதான் முறை. ஞானியை உலகம் கட்டுப்படுத் தாது எனினும், அவன் பொது நலனுக்காக கருமங்களை ஒரு நோக்கமுமின்றி செய்து வரு வான். அவனே அவ்வாறு செய்ய இல்லறத்தான் எவ்வாறு செய் யாது இருக்க முடியும்." என்று பகவான் அர்சுனனை எச்சரித்தார். கடமையில் மூழ்கிய ஒருவனுக்கு எதனுல் சில பாபச் செயல்கள் செய்யவேண்டி வருகிறது என்ற கேள்விக்கு பகவான் "மனித னுக்கு எப்பொழுதும் எதிரி களான காமக்ரோதாதிகளே இதற்கு காரணம். அவைகளுக்கு இருப்பிடம் உடல், புலன்கள், மனம், புத்தி இவைகளே. முன் னதைவிட பின்னது முறையே சிறந்தது. இவை அனைத்தையும் விட மிகச் சிறந்ததும், புத்திக்கே எட்டாததும் தான் ஆத்மா. இதை உணர்ந்தவனின் காமக் ரோதாதிகள் அறவே நீங்கும்." என பகவான் பதிலுரைத்தார். இங்கு மஹான் 'க்ருதகிருத்யன்' என்று கூறப்படுகிறுன். ஆத்மா விடத்தே உள்ள கிளற்சி, திருப்தி, தடையின்றிய ஆனந்தம் உடைய வன் எவனே அவன் செய்ய வேண் டிய கர்மம் ஒன்றுமில்லை. செயல் படுதல் செய்யாமை என்பதால் அவனுக்கு ஆவதும் ஆகாததும் ஒன்று மில்லை. செய்ய வேண்டிய கர்மத்தை பற்றற்று செய்வதே முறை. இவ்வாறு செய்தால் மேலான 'க்ருதகிருத்ய' நிலையை அடையலாம்.

கீதை நாலாவது அத்தியாயத் தின் பெயர் என்ன? அதில் முக் கியமாய் என்ன சொல்லப்படு கிறது?

கீதையின் நான்காம் அத்தியா யமே "ஞானயோகம்'. தீயோரை அடக்கி நல்லோரைக் காக்கவும் அதர்மங்கள் மேலிடுங்கால் தர் மத்தை நிலைநிறுத்தவும், தாமே மானிட உருக்கொண்டது போன்ற தோற்றத்தை உண் டாக்கி அவதரிப்பதாகக் கூறுகி

ளூர் பகவான். குணகர்மவேறு பாட்டின்படி வர்ணாச்ரம தர்மங்களை உண்டாக்கியது தாமே என்கிறார். ஆனால் ஞானியோ இவையொன்றாலும் பாதிக்கப்படாமல் தன் கர்மங்களைச் செய்வான். கர்மாக்களில் வேள்விகள் சிறந்தனவாகக் கருதப்படுகின்றது. அவை பிரும்மரூபம் என்றே சொல்லப்படுகிறது. அவைகளுள் ஞான யஜ்ஞமே மிகச் சிறந்தது. இதன் உண்மையை, குருவணக்கம், விசாரணை இவை மூலம் அறிய வேண்டும். மஹானை 'பிருமஞானி' என்றே அழைக்கலாம். கர்மாவில் அகர்மாவையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்பவன் அவனே. அதாவது தொழில் வழிபடுங்கால் ஆத்மா மாறுதவன் என்றும், செயலற்று இருப்பதும் ஒருவித தொழிலே என்றும் உள்ளபடி காண்பவன் எவனோ அவனே ஞானி. கிடைத்ததைக் கொண்டு திருப்தியாகியும், இரட்டைகளுக்கு அப்பாற்பட்டவனாகியும் பொறாமை அற்றவனாகியும், கார்யம் கைகூடினும் கைகூடாவிடினும் ஒரே மாதிரி இருப்பவனாகியும் உள்ள இவனை எது தான் கட்டுப்படுத்தும்?

ஐந்தாம் அத்தியாயத்தின் பெயர் என்ன? இதில் மஹான் எவ்விதம் விளக்கப்பட்டிருக்கிறான்?

இதற்கு 'ஸந்யாஸ யோகம்' எனப் பெயர். அர்சுனன் குழப்பமுற்றும் தெளியவில்லை. கர்மங்களை விட்டுவிடுவது மேலானதா அல்லது அவைகளில் ஈடுபடுவது மேலானதா என்பதற்கு அவன் விளக்கம் கோரினான். பகவான் "ஞானயோகம், கர்மயோகம், இரண்டும் ஒரே முடிவுள்ள இரு வழிகள், கர்மயோகத்தின் முடிவும் பரமபதம்தான். கர்மம் விட்டு 'வீடு' அடைவது கடினமான வழி. கர்மிக்கும், ஞானி போல், உடல் வேறு நாம் வேறு என்ற உணர்வு பின்னர் கட்டாயம் வரும். ஆதலால் கர்மயோகத்தில் முதிர்ச்சி அடையும் ஞானியே மேன்மையானவன்" என விளக்கினார். இதில் மஹான் 'ஸந்யாசி' என்றும் 'ஸமதர்சி' என்றும் கூறப்படுகிறான். எவன் கர்மம் செய்யுங்கால் அவைகளின் பயன்களை கவனியாது செய்கிறானோ அவன் 'தாமரை இலைத் தண்ணீர்' போல உலகுடன் கூடி வாழ்வான். ஒழுக்க முடைய வேதியனிடத்திலும், பசு, யானை, குதிரை. நாய். புலயன் எல்லோரிடமும் ஒன்றையே காணும் பண்டிதன் இவன்.

ஆறாம் அத்தியாயத்தின் பெயரும் இதில் விளக்கப்படும் மஹானின் குணங்களும் என்ன?

இதற்கு 'தியானயோகம்' என்று பெயர். கர்மயோகம் தியானத்திற்கு முதல் அங்கம். மனோ நிரோதம் இரண்டாவது அங்கம். மனது அடங்கி வழிபட்டு நிற்குங்கால் அது நமக்கு ஒரு உகந்த நண்பன். சலிக்குங்கால் அதுவே நமக்கு பெரும் பகைவன். இம்

மனோநிரோதத்தால் (அடக்க லால்) நன்கு வாழ்பவன் (யோகி) ஸ்திதப்ரஜ்ஞ நிலையை எளிதில் அடைய முடியும். தனிமையில் ஓர் இடத்தில் நன்கு அமர்ந்து, ஒரே நோக்குண்ட மனத்தோடு பரம் பொருளை தியானித்து (மனத்தி லிருந்தி) இந்த யோகத்தில் வெற்றி காண முடியும். அள வுக்கு மேற்பட்ட சாப்பாடு அல் லது கீழ்பட்டஉணவு, தூக்கம் முதலியவை உள்ளவருக்கு இந்த யோகம் பலிக்காது. கைகூடியவ னுக்கு மனதில் சாந்தி உண்டாக மட்டற்ற ஆனந்தம் அடைவான். அவன் இதை எக்காலத்திலும் பிரிந்து இருக்கமாட்டான். இது தான் த்யானத்தின் முடிவு. மனதை அடக்கும் விதம் எவ் வாறு என்ற அர்சுனனது கேள் விக்கு பகவான் பின்வருமாறு விடை அளித்தார். மனதை 'வைராக்கியம்', 'அப்பியாஸம்' இவைகளால் நன்கு அடக்க முடி யும். அதாவது (1) ஒருவனுக்கு தெரிந்த அல்லது தெரியாத, வெளிப் பொருள்களில் பற்றற்று இருத்தல். (2) தியானம் சென்று அடையும் பரம்பொருள், மனம் விட்டுப் போக, அடிக்கடி ஊக்கத் தோடு அதை மனம் முன் கொண்டு வந்து நிறுத்தல், ஆகிய இவைகளால் மனதை வகையாக அடக்கலாம். இந்த யோகத்தில் முடிவைக் காணுமலாவது, அல் லது, மனம் மாறுபட்டு தவறியவ னுகவாவது ஒருவன் இறந்து விட் டால் கூட அவனுக்கு சுவர்க்கம் உண்டு. மறுபிறப்பு பணமுடைய நல்லோர் குலத்திலோ அல்லது ஏழை மஹான்கள் வம்சத்திலோ தான். விட்டகுறை தொட்ட குறை நீங்க கடைசியில் பரமப தம் அடைவான். இதுதான் யோகம் தவறியவன் கதி. தன்னைத் தானே அடக்கி, மண், கல், தங்கம் இவைகளை ஒன்றுகவே காண்ப வன் தான் 'யோகி'. அடங்கிய இவன் மனம் ஆத்மாவிடத்தி லேயே நிலைபெறும்; காற்றில்லா இடத்திலுள்ள விளக்குபோல் அசைவற்றிருக்கும்.

(இந்து தர்ம மன்றம் வெளி யிட்ட ஸ்ரீமத் பகவத்கீதை வினு விடை புத்தகத்திலிருந்து)

## ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாறு

ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமி கள் ஸ்ரீவைகுண்டத்தில் அவதரித் தார்; திருச்செந்தூர் முருகப் பெருமான் அருளால் ஐந்தாவது ஆண்டில் ஊமை நீங்கிக் 'கந்தர் கலிவெண்பா'ப் பாடி அருள் பெற்றுர்.

மதுரை மீனுட்சியம்மை மீது 'பிள்ளைத் தமிழ்' பாடி அம்மை யால்முத்தாரம்அணியப்பெற்றுர்.

திருமலை நாயக்க மன்னன் விருப்பத்திற்கிணங்க 'நீதி நெறி விளக்கம்' என்னும் நூலை அருளி ஞர். தருமை ஸ்ரீமாசிலாமணிதேசி கரை வழிபட்டுப் 'பண்டாரமும், மணிக்கோவை'பகர்ந்தார்; ஆரூர் வேளூர், தில்லை தரிசித்துத் திரு வாரூர் நான்மணிமாலை, முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், சிதம்பர மும்மணிக் கோவை முத லியன பாடினுர்; காசி சென்று, 'சகலகலாவல்லிமாலை'. 'காசிக் கலம்பம்' முதலியன அருளினுர்.

சிங்கத்தின் மீதேறிச் சென்று முகலாய மன்னனைக் கண்டு அவன் உதவியால் கேதார மந்திரம், கேதாரத்துறை, அறச்சாலை, முத லியன அமைத்தார்; வெள்ளியம் பலவாணத் தம்பிரான் முதலி யோருக்கு வித்யா குருவாகத் திகழ்ந்தார்.

# வைகுண்ட பதவி என்பது என்ன?

ஸ்ரீ வி. பலராமையா

சித்தர்கள் என்னுமிடத்து ஞானசித்தர்கள் என்றே பொருள் கொள்ள வேண்டும். தேகங்களில் ஐவகை உண்டென்பர். அவையாவன:- இருள் தேகம், மருள்தேகம், சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம்.

இருள்தேகமுடைய நாம் ஞானதேகமடைய உடலை தீட்சை செய்தல்வேண்டும். சித்தர்கள் அதை தசதீட்சையென்று சொல்லலாயினர். இந்த தசதீட்சைப் பெற்றவனே ஞானி; சீவன் முக்தன்; ஞானசித்தன். இவன் உடலைப் பிணமாகவிடுபவனல்லன். ஞானதேகத்திற்கு தூலம் கிடையாது.- அதுஜோதி மயமானது.

"சீர்மருவு சச்சி தானந்தமாகித்

திகழ்ந்தழியாப் பூரணமாய்

நிரஞ்சனத் தொண் பொருளாய்

ஜோதிமயமாய்— என்பதைக் காண்க.

இறந்து பட்டவனை கைலாய பதவியடைந்தார். சிவபதமடைந்தார். வைகுண்டபதவி அடைந்தார் என்று உலகமக்கள் சொல்வதெல்லாம் உபசார வார்த்தைகளேயாகும்'

"ஒடுங்கிய காலம் சத்தியவாதிக்கு ஒடுங்குமிவ்

வுடல் தன் மாத்திரையில்

ஒடுங்கிடுங்காலம் அசத்தியவாதிக் கொடுங்கு

மிவ்வுடல் அசத்தியமாய்

ஒடுங்கிடுங்கால முடலிங்கே வீழ்ந்தால்

ஒடுங்கின தில்லையென்றுணர்வாய்

என்பதை நோக்கற்பாலாது

ஆகவே இறந்து பட்டவன் மறு உடல் எடுத்தாக வேண்டும். பிறப்பைத் தவிர்க்க இறப்பைத் தவிர்க்க வேண்டுமென்பதே மெய்ம்மொழியாம்.

ஆனல் வேதங்களின் அந்தத்தை அறியாமையால் பண்டிதர்கள் விவேக மற்ற மக்களுக்குக் கூறும் விளக்கங்கள் நீர்க்குமிழ்கள் போல் முடிவு பெறுகின்றன.

உபநிடதங்கள் முப்பத்திரண்டென்றும் அவற்றுள் சுத்த சாதகமான உண்மை முத்தி நிலையைக் கூறும் உபநிடம் உத்திரபாக உபநிடதமாகுமென்று அறிஞர்கள் சொல்வர். ஆனல் இந்த உபநிடதத்தைச் சொல்லி விளக்குவார் இலர். இதனல் உண்மைப் பொருளெது வென்பதை மக்கள் அறிய வாய்ப்பில்லாமலே இருந்து வருகிறது. பண்டிதர்கள் மேடைமேல் சொல்லும் புராணங்கள், வேதங்கள், உபநிடதங்களெல்லாம் கேவலம் கதா காலட்சேபமாகவே முடிகிறது. பரிசுத்தமான அசிபதத்துக்குள்ள பொருளும் இலக்ஷணையும் உபாசன மார்க்கத்தையுடைய வைதீகர்களுக்கு விளங்க மாட்டாது.

அதைப்போன்றே சிவாகமங்கள் இருபத்தெட்டென்றும் அவைகளுள் வாதுளாகமம் சுத்த மார்க்கத்தைச் சொல்வதாம். சிவாகமங்களுக்குப் பொருள் சொல்லும் உலக பண்டிதர்கள் விளங்கத்தக்க யுக்தியோடு சொல்லத் தகுதியற்றவர் களாயிருப்பதால் உண்மைப் பொருள் மக்களுக்கு விளங்காமலேயே இருந்து வருகிறது.

கிரியா மார்க்கம் உபாசன மார்க்கமே முத்தி முடிவென்று திரும்பத் திரும்பப் பண்டிதர்கள் சொல்வது சம்பூரண முக்தி மார்க்கங்களல்ல வென்பதாம். சைவ சித்தாந்திகள் என்று மக்களால் சொல்லப்படுபவர்களும் இதற்கு விலக்கானவர்களல்லவென்றுநாம் சொல்வோ மாகில் அது தவருகாது.

“சிவம்” என்ற பதத்திற்கு உண்மைப் பொருள் “ஜோதி” யாம். ஒருவன் சிவபதம் அடைந்தான் என்பதற்குப் பொருள் “ஜோதியாய்” சிவத்தின் வடிவமாகலாம். உலகு கண்டிடவே ஜோதி சொருபமாய் இவ்வுடல் கரைந்து போகும்.

“மேலொரு சிவத்தைச் சீவன் சென்றடையும்

மேவுமிவ் வுடலிங் குத்தானே

மேலொரு சிவத்தின் வடிவதாமருவாய்.” (சுத்த சாதகம்)

என்பதைக் காண்க.

இதையே தாயுமானவர்

“வெளியா யருளில் விரவு மன்பர்தேக

மொளியாய்ப் பிறங்கியது முண்டோப ராபரமே”-என்றும்

“சித்தநிருவிகற்பஞ் சேர்ந்தார் உடற்றீபம்

வைத்த கற்பூரம் வணங்கும் பராபரமே”-என்றும் சொல்கிருர்.

வடஇந்தியாவில் 4 மாதங்களுக்குமுன்பு ஓர் சாது அடைந்த சிவபதம் எல்லா செய்தித்தாள்களி

லும் வெளியானதை நேயர்கள் பார்த்திருக்கலாம். உத்தரபிரதேசத்தில் ஒரு நகரத்திற்கடுத்தாற்போல் பஞ்சாபிலிருந்து வந்த சாது குடிசை ஒன்றில் வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் 12 வயதுடைய பள்ளி மாணவன் அக்குடிசை வழியே சென்று கொண்டிருந்தான். திடீரென சாது எரிகின்றார் சாது எரிகின்றார் எனக் கூக்குரலிட்டான். மக்கள் பலர் திரள் திரளாக ஓடினர்.

சாது ஓர் கம்பளியின் மேல் உட்கார்ந்திருந்தார். அவர் உடலெல்லாம் நெருப்பு எரிவதுபோல் தோற்றமளித்தது. ஆயினும் மக்கள் அது நெருப்பல்லவென்பதை உணர்ந்தனர். அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே 2 மணி நேரத்துக்குள் அவர் உடல் மறைந்தது. கீழிருக்கும் கம்பளி தான் நின்றது. அதுவும் 1மணி.க்குள் மறைந்தது.

இச்சம்பவம் இந்த நூற்றாண்டிலும் பாமரமக்கள் கண்ட காட்சி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் வள்ளலார் அடைந்த முக்தி நிலையும் அதுவே.

ஆகவே இந்த நிலைகளெல்லாம், சநாதன வைதிக நண்பர்களுக்கு விளங்க மாட்டாது. சித்தர்கள் மரபில் வந்தவர்களுக்கே உண்மை நிலைவிளங்குமென்க. இந்த நிலை சாத்திரங்கள் மூலமோ அல்லது கேள்வியின் மூலவோ, பிராணயாமம் மூலமாகவோ அடைதல் முடியாது. இப்பூத உடலை கற்ப சாதனை செய்து தீட்சை பெற்றாலொழிய சித்த வேதங்களில் சொல்லப்பட்ட தேகமாறுதல்கள் பெறமுடியாது.

இவ்வித மாறுதல்கள், அதாவது கற்பசாதனை செய்து காயத்தை சித்தி செய்வதற்கு புறத்திலுள்ள அமுதத்தினால்தான் முடியுமென்பதாம். இந்த அமுதம் உடலிலுள்ள அழுக்கை நீக்கி சுத்ததேகம் செய்யவல்லது; பிரணவ தேகம் செய்யவல்லது. இது நம் பிரம்மரந்தத்திலுள்ள அமுதத்தை சுரக்கச் செய்கிறது.' இந்த அமுதத்தைப் பெற்று காயசித்தி பெற்று சாகா உடல் பெற்று ஜோதிமயமாவதே உண்மை முக்தி நிலையாம்.



---

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T. ராமனுதன் 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17